(3) THE MADRAS LAND REFORMS (FIXATION OF CEILING ON LAND) BILL, 1960 (L.A. BILL NO. 8 OF 1960) AS AMENDED BY THE JOINT SELECT COMMITTE.

DEPUTY SPEAKER: We shall now proceed with the clause-by-clause consideration of the Land Reforms (Fixation of Ceiling on Land) Bill, 1960. We shall first take up clause 2.

*Clause 2.*

DEPUTY SPEAKER: The question is—

" That clause 2 do stand part of the Bill. "

The hon. Member Sri K. Sattanatha Karayalar has given notice of an amendment to this clause. But I have disallowed it. Besides the hon. Member is not in his seat. The hon. Member, Sri T. Sampath, who has also given notice of an amendment to this clause, is also not in his seat. There are no other amendments to this clause. However, hon. Members who want to speak on the clause, may do so.

SRI M. KALYANASUNDARAM: உதவி சபாநாயகர் அவர்களே, இந்த பிரிவின் பேரில் திருத்தங்கள் இல்லாவிட்டாலும், இந்தப் பிரிவின் மீது பேச அனுமதி கொடுத்து இருப்பதால் ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். இந்தப் பிரிவு தர்ம ஸ்தாபனங்கள் கோவில்கள் இவைகளுடைய நிலங்களுக்கெல்லாம் விதி விலக்குக் கொடுக்க வேண்டுமென்பதாகும். முன்னால் இம்மாதிரி நிலங்களுக்கு உச்ச வரம்பு கட்ட அரசியல் சட்டம் இடம் கொடுக்கவில்லை என்ற காரணம் கூறப்பட்டது. அந்தக் காரணம் இன்னமும் சரியென்று சர்க்கார் கருதுகிறார்களா என்று தெரியாது. மேலும், அது அரசியல் சட்டம் இடம் கொடுக்காத காரணம் தானா அல்லது வேறு ஏதாவது முறையிலே இந்த சொத்துக்களையெல்லாம் நிர்வகிக்க வேண்டும் என்று சர்க்காருக்கு எண்ணம் இருக்கிறதா என்றும் தெரிய வேண்டும். விதி விலக்கு அளிக்க வேண்டிய அவசியமில்லை என்றுதான் நான் கருதுகிறேன். இந்த சபையில் முதன் முதல் வந்த மசோதாவில் அவர்கள் 200 ஏக்கரா அளவுக்கு வைத்துக் கொள்ளலாம் என்று பிரிவு இருந்தது. அதிலிருந்தும் இப்பொழுது விதிவிலக்குக் கொடுத்திருப்பது, எந்த விதமான உச்ச வரம்பும் இல்லாமல் இருப்பது ஏன், அரசாங்கத்தின் எண்ணம் என்ன என்று தெரிவிக்க வேண்டும். விதி விலக்கு அவசியம் இல்லை, முதலில் இருந்தபடியாவது செய்ய வேண்டும். எதிர் காலத்தில் அவர்கள் சொத்து சேர்ப்பது பற்றி, உச்ச வரம்புக்கு மீறி சேர்ப்பதைப் பற்றி வேண்டுமானால், அதற்கு வேண்டிய விதி விலக்கு அளிக்கலாம்.

இது சம்மந்தமாக தனியொரு மசோதா கொண்டுவரப்படும் என்று செலக்ட் கமிட்டியில், இந்த மசோதா பரிசீலனையில் இருக்கும் போது சொல்லப்பட்டது. அது எந்த நிலையில் இருக்கிறது என்று சொல்ல வேண்டும். ஆகவே, இந்தப் பிரிவுக்கு அவசியம் இல்லை, இந்தப் பிரிவை நான் ஆட்சேபிக்கிறேன்.

* SRI R. SRINIVASA IYER: ஸார், இந்த இரண்டாவது கிளாஸில், கோவில்கள், மடங்கள், தர்ம ஸ்தாபனங்கள் இவைகளின் நிலங்கள் சம்மந்தப்பட்டவரை விதிவிலக்கு அளிக்கப்படுகிறது. இவைகளைப் பொருத்தவரை என்ன செய்யப்போகிறோம் என்று கனம் அங்கத்தினர் பேசினார்கள். அதைப் பற்றி ஒரு நாள் பூரா செலக்ட் கமிட்டியில் விவரமாக எடுத்துச் சொல்லி, இந்த சட்டத்திலே அதைப் பற்றிச் சேர்க்க வேண்டாம், அப்படிச் சேர்த்தால், இந்த உச்ச வரம்பு சட்டமே நிறைவேற்றப்படுவதில் இடைஞ்சல்கள் ஏற்படும் என்றும் சொல்லப்பட்டது. சுப்ரீம்கோர்ட்டுக்கு கோவில் ட்ரஸ்டியோ அல்லது மடாதிபதியோ அல்லது தர்ம கர்த்தாவோ

போவாரேயானுல், இம்மாதிரியான இக்கட்டு ஏற்படும். ஏற்கனவே, "சிரூர் மட் கேஸ்" என்று சுப்ரீம் கோர்ட்டில் தீர்ப்பு இருப்பதில் கோவில் நிலங்கள், மடாதிபதிகள் நிலங்கள் இவைகளைப் பாதிக்கும் வகையில் எந்த விதமான சட்டமும் நிறைவேற்றக் கூடாது என்று இருக்கிறது. அதற்குப் பொருத்தமாக இந்த இரண்டாவது கிளாஸ் அமைக்கப்பட்டிருக்கிறது. முக்கியமாகக் கவனிக்க வேண்டியது என்னவென்ருல் இந்த நிலங்களிலிருந்து வரும்படியை அதிகப்படுத்தவோ அல்லது உற்பத்தியை, உணவு தானியங்களை அதிகப்படுத்தவோ எந்த வகையில் பயன்படுத்தவேண்டுமோ அந்த வகையில் சர்க்கார் எந்த வகையில் காரியங்களைச் செய்யலாம். ஆகவே, இந்த மசோதாவில் இந்த விலக்கு அளிப்பதால் அது பாதிக்கப்படாது.

ஒன்று சொல்ல விரும்புகிறேன். இன்றைக்கு கோவில்கள் தர்ம கர்த்தா மானேஜ்மெண்டில் இருந்தாலும், ஏதாவது ஒன்று, இரண்டு மடாதிபதிகள், தர்ம கர்த்தாக்கள் சரியான முறையில் நடக்கவில்லையென்ற காரணத்திற்காக, எல்லா ஸ்தாபனங்களையும் பாதிக்கும் முறையில் சட்டம் செய்யக்கூடாது என்று சொல்ல விரும்புகிறேன். எவ்வளவோ மடங்கள், தர்ம ஸ்தாபனங்கள் நல்ல முறையிலே, ஒழுங்கான மதாசார அடிப்படையில் இயங்குகின்றன. அவைகளையும் பாதிக்கும் வண்ணம் சட்டம் வகுக்கக் கூடாது என்று சொல்லி, இதற்கு எந்த திருத்தமும் வந்தால் ஆட்சேபிக்கிறேன் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இது சம்மந்தமாக மடாதிபதிகள் மற்றவர்களிடம் இருந்து ரெப்ரசென்டேஷன்கள் செலக்ட் கமிட்டிக்கு வந்து இருக்கின்றன. இது தவிர, கோவில்களுக்கு இன்றைக்கு நிலங்களை 200 அல்லது 100 ஏக்கரா தான் என்று வைத்து விட்டு, சர்க்கார் அவைகளுக்கு தஸ்திக் அலவன்ஸ் கொடுத்தால் என்ன நிலையாகும் என்று பார்க்க வேண்டும். ஆக்ட் 26/48 பிரகாரம், கோவில்களுக்கு உரித்தாக இருந்த இனம் கிராமங்களிலிருந்து கொடுக்கும் தஸ்திக் அலவன்ஸ் பார்த்தால், ரூ. 7,500 வரும்படி வந்த கோவில்களுக்கு இன்றைக்கு ரூ. 800 கொடுத்தால், ஆறு காலம் பூசை நடந்தது இன்றைக்கு இரண்டு காலமாகக் கூட நடத்த முடியவில்லை. இதற்காக நஷ்டஈடு கொடுத்து வருகிறோம். எத்தனை காலம் இப்படி ஜெனரல் ரெவின்யூவிலிருந்து, இதரர்கள் வரிப்பணத்திலிருந்து, நஷ்டஈடு கொடுப்பது ? இது ரொம்ப ஆட்சேபனைக்கு இடமாகும். கோவில்களின் நிலங்களை இன்றைக்கு கட்டுப்பாடு செய்து, தஸ்திக் அலவன்ஸ் கொடுத்தால், பின்னுல் உற்பத்தி பெருகி, விலைவாசி மாறி, வரும்படி ஜாஸ்தியானுல், லாபத்தை அடைவதில் இடைஞ்சல்கள் ஏற்படும். கோவில்களின் உபயோகத்திற்காகக் கொடுத்த நபர்கள் அதை வேறு எதற்கும் எடுக்கக் கூடாது என்று ஆட்சேபிக்கலாம். ஆகவே, பல இன்னல்களுக்கு இடம் கொடுக்கும். ஆகவே தான் அதையெல்லாம் இந்த உச்ச வரம்பு சட்டத்தில் புகுத்த வேண்டாம் என்று செலக்ட் கமிட்டியில் தீர்மானித்து இந்த இரண்டாவது கிளாஸ் போடப்பட்டிருக்கிறது. இதற்கு எவ்விதத் திருத்தமும் வேண்டியதில்லை. திருத்தம் கொண்டு வர இருந்த ஸ்ரீமான் கரையாளரும் அதைப் பிரேரேபிக்கவில்லை. ஆகவே, இந்த கிளாஸை இப்பொழுது எந்த விதத்திலும் ஆட்சேபிக்கத் தேவையில்லை என்று சொல்லிக் கொண்டு முடிக்கிறேன்.

*Sri M. P. SUBRAMANIAM: சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த இரண்டாவது பிரிவு, இந்த மசோதா பொறுக்குக் குழுவிற்குப் போவதற்கு முன்பு இடம் பெறவில்லை. அந்த பிரிவுக்கு மாருக, ஏற்கனவே 200 ஏக்கர் வரை என்று மசோதாவில் இருந்த பிரிவை மாற்றப்பட்டிருக்கிறது. இதற்குக் காரணம் சொல்லும்போது, தர்ம ஸ்தாபனங்கள் நிலம் பற்றி இந்த மசோதாவில் கட்டுப்பாடு செய்தால், இது இந்த சட்டமே நிறைவேற்றப்படாமல் போகலாம் என்று சொல்லப் படுகிறது. அதனுல்தான் இந்தப்பிரிவை இங்கே நுழைத்து இருப்பதாகச் சொல்லப் படுகிறது. இது தர்ம ஸ்தாபனங்களின் உரிமையைப் பாதிக்கும் என்ற முறையில் செய்யப்பட்டிருக்கிறதா அல்லது கொள்கை அளவில் தர்ம ஸ்தாபனங்களின் நிலங்களைத் தொடக்கூடாது என்ற அடிப்படையில்

செய்யப்பட்டிருக்கிறதா என்று விளக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். இரண்டு விதமாகச் சொல்லப்படுகிறது. ஒன்று அரசாங்கத்திற்கு ஏதோ விருப்பம் இருப்பது போலவும், அரசியல் சட்டம் குறுக்கே இருப்பது போலவும் சொல்லப்படுகிறது. மற்றொன்று, தர்ம ஸ்தாபனங்களின் நிலங்களிலே தலையிடுவது கொள்கையளவிலே சரியில்லை என்ற கருத்தும் வெளியிடப்பட்டது. இதில் எது அரசாங்கத்தின் கருத்து என்று தெளிவுபடுத்த வேண்டும். அரசியல் சட்டம் அரசாங்கத்திற்கு குறுக்கே நிற்கிறது என்றால், அந்த அரசியல் சட்டத்தைத் திருத்த என்ன முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அது சம்மந்தமாக மத்திய சர்க்கார் சட்ட இலாகா, நம் சட்டஇலாகா ஆராய்ந்து மாற்று யோசனைகள், வழிவகைகள் அரசாங்கத்திற்கு தெரிவிக்கப்பட்டு, சர்க்கார் தெரிந்து கொண்டார்களா ? அரசாங்கத்தின் கொள்கை அளவில் அதில் தலையிடக்கூடாது என்று இருந்தால் வெறும் பிரச்னை. இப்பொழுதுள்ள சட்டத்தின் நோக்கம் நிலங்கள் ஒன்றாகக் குவிந்து இருப்பதை தடுக்க வேண்டும் என்றும், அது பரவலாக இருக்க வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. அந்த நிலைமையில் தனி நபரிடம் இருக்கக்கூடிய நிலத்தை மட்டும் கட்டுப்படுத்துவானேன்? அதைப் போலவே கோயில்களின், மடங்களின் நிலங்களையும் ஏன் கட்டுப்படுத்தக்கூடாது? மனிதனிடத்தில் மட்டும் குவிந்திருப்பதைக் கட்டுப்படுத்துவானேன், கடவுளிடம் இருப்பதை மட்டும் கட்டுப்படுத்தாமல் இருப்பதற்குக் காரணம் என்ன? அப்படி கடவுள் நிலங்களைக் கட்டுப்படுத்தாமல் இருப்பது நியாயம் அல்ல. கடவுளிடத்தில் நம்பிக்கை கொண்டவர்களும், மடத்தில் நம்பிக்கைக் கொண்டவர்களும் கூட இப்படி அங்கு நிலம் குவியலாக இருப்பதைக் கண்டிக்கிறார்கள். அந்த நிலங்கள் எந்த காரியங்களுக்காக எழுதி வைக்கப்பட்டதோ அந்தக் காரியங்கள் எல்லாம் சரிவர நடைபெற்று வரவேண்டும் என்பதில் ஆட்சேபனை இல்லை. அதனால் அதிகப்படியான நிலம் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. வரம்புக்குட்பட்ட நிலத்திலிருந்து வரக்கூடிய வருவாய் போதாமல் இருக்கிறது என்றால் அதற்கு தஸ்திக் அலவன்ஸ் கொடுக்கலாம் என்று முந்திய மசோதாவில் சொல்லப்பட்டிருந்தது, அந்த நிலைமையில் குவியலாக கோயில்களுக்கும், மடங்களுக்கும் நிலங்கள் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. இதற்கு முன்பு அரசாங்கம் கொண்டு வந்த மசோதாவில் 200 ஏக்கருக்கு மேல் இருக்கக்கூடாது என்று சொன்னபோது அதில் போதுமான வருவாய் வரவில்லையானால் தஸ்திக் அலவன்ஸ் கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டது. பொறுக்குக் கமிட்டியிலிருந்து வந்த மசோதாவில் இந்த விதி சேர்த்திருப்பதின் அவசியம் என்ன என்பது தெளிவாக்கப்படவில்லை. தஸ்திக் அலவன்ஸ் கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை ஏன் இப்பொழுது கடைப்பிடிக்கக்கூடாது. பல தர்ம ஸ்தாபனங்களும், மடங்களும். கோயில்களும் பல ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களை வைத்துக்கொண்டு அங்கு சர்வாதிகாரம் நடத்துவதாகச் சொல்லப்படுகிறது. அதை வைத்துக்கொண்டு சகல சக்திகளையும் திரட்டி, மக்களை அடக்கி ஒடுக்கி வருவதாகச் சொல்லப்படுகிறது. சர்வாதிகாரம் ஆதிக்கம் செய்ய அந்த நிலங்கள் அவர்களுக்கு சௌகரியமாக இருக்கிறது. அவர்களிடம் பல ஏக்கரா நிலங்கள் இருப்பதால் பல பிரச்னைகள் ஏற்படுகின்றன. கூட்டுறவு முறையில் அங்குள்ள நிலங்களை எடுத்து சாகுபடி செய்யலாம் என்றும் சொல்லப்படுகிறது. அதற்கு வேண்டிய வழி வகை செய்யலாம் என்றும் சொல்லப்பட்டது. இதுவும் உறுதிச் செய்யப்படவில்லை. எல்லாப் பிரச்னைகளும் தீர்ந்து விடும் என்பதற்கு சொல்வதற்கில்லை. எந்த வகையிலும் கோயில் நிலங்களுக்கும், தர்ம ஸ்தாபன நிலங்களுக்கும், மடங்களின் நிலங்களுக்கும் விலக்கு அளிக்க வேண்டிய அவசியமே இல்லை என்பதை வலியுறுத்திக் கூறிக் கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் இரண்டாவது கிளாஸ் விஷயமாக சில நண்பர்கள் குறிப்பிட்டதை நான் ஆட்சேபிக்கிறேன். அவர்கள் சொன்னவற்றையெல்லாம் நான் எதிர்க்கிறேன். கோயில்கள், தர்ம ஸ்தாபனங்கள்,

மடங்கள் இவைகளுக்கு இருக்கக்கூடிய நிலங்களுக்கு விலக்கு அளித்திருப்பதை ஆட்சேபிக்கிறார்கள். அதை நான் ஆட்சேபிக்கிறேன். எவ்வளவோ மடங்களும் தர்ம ஸ்தாபனங்களும் நல்ல முறையில் நடைபெற்றுத்தான் வருகின்றன. பல கோயில்களுக்கும் மடங்களுக்கும் பலர் பல காரியங்களைச் செய்வதற்கு என்று பல ஏக்கரா நிலங்களை எழுதி வைத்திருக்கிறார்கள். அந்தந்தக் காரியங்கள் செவ்வனே நடைபெற வேண்டும் என்பதற்காக அவற்றை எழுதி வைத்திருக்கிறார்கள். அவைகள் செவ்வனே இப்பொழுது நடைபெற்று வருகின்றன. இப்பொழுது ஏற்படுத்தப்பட்டிருக்கிற சட்ட திட்டங்களினால் அவைகள் செவ்வனே நடைபெற்று வருகின்றன. அந்த நிலங்களையெல்லாம் எடுத்து பிரித்துக்கொடுத்து விட்டால் அவைகள் எல்லாம் எந்த காரியங்களுக்கு எழுதி வைக்கப்பட்டனவோ அவைகள் எல்லாம் சரிவர நடைபெறாமல் போய்விடுவதற்கு வழி ஏற்பட்டு விடும். அதனால் அந்த நிலங்களை எடுத்துக் கொடுத்துவிடக்கூடாது. அவைகளுக்கு விதி விலக்கு அளிக்க வேண்டியது அவசியம்தான். மத அடிப்படையில் அவைகள் எழுதி வைக்கப்பட்டிருப்பதால்தான் இப்பொழுது மதக் காரியங்கள் எல்லாம் நல்ல முறையில் நடைபெற்று வருகின்றன. அந்நிய ஆட்சி இருந்த காலத்தில் கூட மதத்திலும், கோயில்களிலும் கை வைக்கக்கூடாது என்று சொல்லி அந்த முறையில் ஆட்சி நடத்தி வந்திருக்கிறார்கள். அவ்விதம் அவர்களே இருந்தபோது நாம் ஏன் அவற்றில் கை வைக்க வேண்டும். அவற்றில் தலையிடாமல் இருந்தால்தான் நாட்டின் பண்பு உயரும். நாட்டில் பண்பு குறையாமல் இருக்கும். அதனால் மத தர்ம ஸ்தாபனங்களின் சொத்துக்களில் தலையிடாமல் இருப்பது நல்லது என்று தோன்றுகிறது. அவைகள் எல்லாம் சரியான முறையில் பராமரிக்கப்படாமல் இருந்தால் அதற்கு தனிப்பட்ட முறையில் நடவடிக்கை எடுத்துக்கொண்டு தண்டிக்கலாம். சில நபர்கள் சொல்லுகிறார்கள், தனி நபர்களுக்கு இருக்கும் நிலங்களை மட்டும் எடுத்துக் கொள்ளலாமா என்று சொல்லுகிறார்கள். தனி நபரிடம் குவியலாக நிலம் இருந்தால் அவைகள் அந்த ஒரு நபருக்கு மட்டும்தான் உபயோகமாக இருக்கும். ஆனால் கோயில்களுக்கோ அல்லது மடங்களுக்கோ அல்லது தர்ம ஸ்தாபனங்களுக்கோ அதிகப்படியான நிலம் இருந்தால் அதனால் பலர் வசதி பெறலாம். அதனால் அவைகளுக்கு அதிகப்படியான நிலம் இருப்பதனால் எந்த விதமான கெடுதலும் கிடையாது. கோயில்களுக்கும், மடங்களுக்கும், தர்ம ஸ்தாபனங்களுக்கும் இருக்கக்கூடிய நிலங்கள் எல்லாம் நல்ல முறையில் பயன்படக்கூடியதாக இருக்க வேண்டும். ஆனால் ஒரு தனி நபரிடம் அப்படி குவியலாக இருந்தால் அதன் பயன் ஒருவர் மட்டும்தான் அடைவதாக இருக்கும். கோயில்களுடைய நிலத்தையும், மடங்களில் நிலத்தையும், தர்ம ஸ்தாபனத்தின் நிலத்தையும் எடுத்துக்கொள்வதற்கு அரசியல் சட்டத்தில் இடம் கொடுக்காமல் இருப்பதோடுகூட அவைகள் எல்லாம் நல்ல காரியங்களுக்கு என்று எழுதி வைத்திருப்பதால் அவைகளை எடுத்துக்கொள்வது அவ்வளவு நியாயம் அல்ல. ஏதாவது ஒரு இடத்தில் தவறு செய்திருக்கலாம். அதனால் எல்லா இடங்களிலும் தவறுகள் நடக்கிறது என்று சொல்ல முடியாது. தவறுகள் நடந்திருந்தால் அதை வேறு முறையில் விசாரித்து கண்டிக்கலாமேயொழிய நிலங்களை எடுத்துக்கொள்வது என்பது சரியல்ல. அவற்றில் தலையிடக்கூடாது. நல்ல முறையில் நடத்துவதற்கு சர்க்கார் திட்டம் போட்டு நடத்த வேண்டுமேயொழிய சரியாக நடக்கவில்லை என்பதற்காக அவைகளை எடுத்துக்கொள்ளக்கூடாது. இப்பொழுதே எவ்வளவோ சட்டங்களைப் போட்டிருப்பதால் எவ்வளவோ கோயில்களும், மடங்களும், தர்ம ஸ்தாபனங்களும் நல்ல முறையில் நடந்து வருகின்றன. அதனால் நாட்டில் நல்ல பண்பு ஏற்பட்டிருக்கிறது. நல்ல ஒழுக்கம் ஏற்பட்டிருக்கிறது. நல்ல சீர்திருத்தம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே கோயில் நிலங்களிலும், மடங்களின் நிலங்களிலும், தர்ம ஸ்தாபன நிலங்களிலும் சர்க்கார் தலையிடக் கூடாது என்று வலியுறுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இன்றைய தினம் விவாதத்தில் இருக்கக்கூடிய மசோதாவில் கோயில் நிலங்களுக்கும், மடங்களின் நிலங்களுக்கும், தர்ம ஸ்தாபன நிலங்களுக்கும்

உச்சவரம்பு கட்டக்கூடாது என்று இருக்கக்கூடிய விதியை மாற்ற வேண்டும் என்று சொல்லப்படுகிறது. மனிதனுடைய நிலங்களுக்கு உச்ச வரம்பு கட்டும்போது கோயில் நிலங்களுக்கும் ஏன் உச்ச வரம்பு கட்டக்கூடாது? அப்படி உச்ச வரம்பு கட்டி விட்டால் அது விஷயமாக சுப்ரீம் கோர்ட்டு வரையில் போகக்கூடியவர்கள் இருக்கிறார்கள். அதைப் போலவே மனிதனுடைய நிலங்களுக்கும் உச்ச வரம்பு கட்டினால் சுப்ரீம் கோர்ட்டுக்கும் போகக்கூடியவர்களும் இருக்கிறார்கள். அரசியல் சட்டத்தில் 26-வது ஆர்ட்டிகிள்படி சர்க்காருக்கு எல்லாவற்றையும் ரெகுலேட் பண்ணுவதற்கும், கண்ட்ரோல் பண்ணுவதற்கும் அதிகாரம் இருக்கிறது. அந்த நிலைமையில் யார் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போனால் என்ன ? அந்த செக்ஷன் இருக்கும் வரையில் சர்க்கார் எந்த அதிகாரத்தையும் எடுத்துக்கொள்ளலாம். யாருடைய நிலமாக இருந்தாலும் அதை எடுத்துக்கொள்ளலாம். சர்க்கார் எந்தக் காரியத்தைச் செய்வதற்கும் அது வசதியாக இருக்கிறது. அந்த விதி இருக்கும் வரையில் சர்க்கார் எந்த காரியத்தையும் செய்யலாம். தஞ்சை ஜில்லாவில் இருக்கக்கூடிய நிலங்களை எடுத்துக்கொண்டால் கோயில் நிலங்கள் மட்டும் நான்கு லட்சம் ஏக்கருக்கு மேல் இருக்கிறது. மடங்களின் நிலங்கள் மூன்று லட்சம் ஏக்கருக்கு மேல் இருக்கிறது என்று சொல்லலாம். மடங்கள் எதற்காக ஏற்பட்டன. ஜாதி மத சமயத்தைப்பற்றி பிரசாரம் செய்வதற்குத்தான் அவைகள் ஏற்பட்டன. ஆனால் இப்பொழுது இருக்கக்கூடிய மடங்கள் எல்லாம் கடவுள் பக்தியுடன் நடைபெற்று வருகிறதா என்பதைப் பார்க்க வேண்டும். மதத்தையும், சமயத்தையும் பிரசாரம் செய்யும் வகையில் பிரசாரம் செய்து வருகிறதா என்பதையும் பார்க்க வேண்டும். ஜனங்களுக்கு பக்தி ஏற்படும் வகையில் பிரசாரம் செய்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். மடங்கள் இப்பொழுது எப்படி நடை பெற்று வருகின்றன என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம்தான். திருப்பனந்தாள் மடம் எப்படி வந்தது என்பதைப் பார்க்க வேண்டும். அது மதத்தை பிரசாரம் செய்வதற்கும் பக்தியை உண்டாக்குவதற்கும் ஏற்பட்டது அல்ல. அந்தக் காலத்தில் ராமேஸ்வரம் போகக்கூடியவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் வகையில் ஏற்பட்டது. வழியில் திருடர்கள் மக்களுடைய பொருளை திருடிக்கொண்டு போய் விடுவார்கள் என்றும், அதனால் பொருள்களையும், பணத்தையும் அவர்களிடத்தில் கொடுத்து வைத்துவிட்டு சென்று வேண்டும்போது கேட்டால் கொடுப்பதாகவும், காசி சென்றவுடன் அங்கு தங்களுடைய பணத்தையும், பொருளையும் பெற்றுக்கொள்ளலாம் என்றும் அதற்கு என்று ஏற்பட்ட மடம்தான் அது. மதத்தையோ அல்லது பக்தியையோ பரப்புவதற்கு என்று ஏற்பட்ட மடம் அல்ல அது. கடைசியில் அந்தப் பணத்தையெல்லாம் அந்த மடத்தைச் சேர்ந்தவர்கள் எடுத்துக்கொண்டு விட்டார்கள். அதனால் பெரிய கடவுள் பக்தியில் ஏற்பட்ட மடம் அல்ல அது. மதப்பிரசாரம் செய்ய ஏற்பட்ட மடம் அல்ல அது. இப்படிப்பட்ட மடங்கள் இருந்தால் நாட்டிற்கு என்ன பிரயோசனம் என்பது நமக்குப் புரியவில்லை. ஆகவே, கோவிலுக்கும் மடங்களுக்கும் உச்ச வரம்பு 200 அல்லது 300 ஏக்கர் என்று வைத்துக்கொள்ளவேண்டும். அதிலிருந்து வரும் வருமானம் அவர்களுக்குப் போதவில்லையென்றால், ஹிந்து ரிலிஜியஸ் என்டௌமெண்ட் போர்டு அரசாங்கத்தின் நிர்வாகத்தில் இருப்பதால், அங்குள்ள நிதியிலிருந்து பணம் எடுத்துக் கொடுக்கலாம். மடத்தையும் எந்தக் காரணத்தைக் கொண்டும் விட்டுவிடக் கூடாது, அவர்களுக்கு உச்ச வரம்பிலிருந்து விதி விலக்குக் கொடுத்துவிடக்கூடாது.

10-00 a.m. திட்டக் கமிஷன், இப்படிப்பட்ட மடங்களுக்கு விதி விலக்குக் கொடுக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறதா? மடங்களுடைய பூமியைப் பொறுத்த வரையில், விதி விலக்கு கொடுக்க வேண்டும் என்று எந்தச் சட்டத்திலே சொல்லியிருக்கிறது? சென்னை சர்க்கார், டெல்லிக்குச் சென்று மத்திய சர்க்காரையும், திட்டக் கமிஷனையும் அடிக்கடி பார்த்து வருகிறார்கள். திட்டக் கமிஷனுடைய ஆலோசனையின் அடிப்படையில்தான் சென்ற தடவை மசோதா கொண்டுவரக்கூடியசமயத்தில் மடத்து நிலங்களுக்கு 200 ஏக்கர் உச்ச வரம்பு என்று வைத்தார்கள். அப்பொழுது அப்படி

19th September 1961] [Sri N. K. Palanisami]

வைத்துவிட்டு, பொறுக்குக் கமிட்டியில் என் இந்த ஷரத்தை எடுத்து விட்டார்கள் என்று நான் கேட்க ஆசைப்படுகிறேன். சர்க்கார் இதைச் செய்தது தவறு. முதன் முதலில் இந்த மசோதா கொண்டுவரப்பட்ட போது 200 ஏக்கரா என்று இருந்தது. அதையே இப்பொழுது ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

Sri K. B. S. MANI : கனம் உப தலைவர் அவர்களே, இந்தத் திருத் தத்தை முழுவதுமாக எடுத்துவிடவேண்டுமென்று நான் சொல்லாமல், அதிலே ஒரு திருத்தம் செய்யவேண்டுமென்று நான் நினைக்கிறேன். மடாதி பதிகளைப் பற்றியும், மடாலயங்களைப் பற்றியும், கோயில் சொத்துக்களைப் பற்றியும் பல கனம் அங்கத்தினர்கள் பேசினார்கள். அப்படி பேசும் போது, தரும ஸ்தாபனங்கள் மிக மிக உயர்ந்த நிலையில் தருமத்தை போதிக்கிற முறையில் நடப்பதாக வெகு அழகாக சில நண்பர்கள் பேசினார்கள். இதுபற்றி அவர்கள் சற்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்றைக்கு வேதத்தின் பேராலும், புராண இதிகாசங்களின் பேராலும் என்ன நடந்துகொண்டிருக்கிறது ? இன்றைக்கு யார் புராண இதிகாசங்களை நம்பி வாழ்கிறார்கள்? எந்த ஆள் சரிவர நடக்கிறார் என்று யாராவது சொல்ல முடியுமா ? வேதம், புராணங்கள் இவைகளைப் படிக்க வேண்டிய பிராமணர்கள் வியாபாரம் செய்யக்கூடாது, கடல் கடக்கக்கூடாது, கட லுக்கு அப்பால் போய் படிக்கக்கூடாது என்று சொல்லப்படுகிறது. அப்படி ஏதாவது இப்பொழுது நடைபெறுகிறதா ? அதே மாதிரி மடத்திலே மடாதிபதிகள் . . .

DEPUTY SPEAKER : The hon Member should confine his speech to the clause under discussion and not speak on any other matter.

Sri K. B. S. MANI : மடாதிபதிகள் பல்லக்கைத் தவிர, ரயிலிலோ கப்பலிலோ, ஆகாய விமானத்திலோ போகக்கூடாது, ஆனால் . . . (ஸ்ரீ ஆர். கிருஷ்ணசாமி நாயுடு குறுக்கிட்டு.) மதம்தான் வாழ வைக்கிறது என்று சொன்னதினாலே சொல்கிறேன். மதத்தைக் காப்பதுதான் தர்ம ஸ்தாபனத்தின் வேலை. மதம்தான் நாட்டை ரட்சிக்கிறது என்று சொல்வ தால் இப்படிச் சொல்கிறேன். மதத்திற்கும் இப்பொழுது நடக்கிற காரி யங்களுக்கும் சம்பந்தம் இல்லாமலிருக்கிறது. ஆகையால், சொத்து அந்த மடங்களுக்குத் தேவை இல்லை.

Sri M. R. KANDASWAMI MUDALIYAR : On a point of Order, Sir, நான் பேசும்போது, மதம் தான் இந்த உலகத்தை ரட்சிக்கிறது என்று சொல்லவில்லை. மதம் ஒழுக்கத்தைப் போதிக்கிறது, அது அவசியம் என்று சொன்னேன். மதம் உலகத்தை ரட்சிக்கிறது என்று நான் சொன்னதாகச் சொல்வது சரியல்ல.

DEPUTY SPEAKER : இது பாயிண்ட் ஆப் ஆர்டர் அல்ல. இது பாயிண்ட் ஆப் பர்ஸனல் எக்ஸ்ப்ளனேஷன். கனம் அங்கத்தினர் பேசி முடித்த பிறகு பாயிண்ட் ஆப் பர்ஸனல் எக்ஸ்ப்ளனேஷன் எழுப்பியிருக்கலாம்.

Sri K. B. S. MANI : மதத்தின் பேரால் நல்ல காரியங்கள் நடத்த வேண்டுமென்று மூதாதையர்கள் எண்ணி சொத்து எழுதி வைத்திருந் தாலும், அந்த நல்ல காரியங்கள் தற்போது சரிவர நடக்கவில்லை என் பதற்கு நூற்றுக்கணக்கான சான்றுகளை நான் தர முடியும். ஆகவே தான், அந்தச் சொத்துக்கள் மதத்தின் பேரால் இருந்தாலும், அவை மக்களுக்காகப் பயன்பட வேண்டும். ஏனென்றால், மதம் மக்களுக் காகத்தான் இருக்கவேண்டுமேயல்லாது, மதத்திற்காக மக்கள் என்று இருக்கக்கூடாது. இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு, மத ஸ்தா னங்களுக்குச் சொந்தமான நிலங்களை அரசாங்கம் எடுத்து, மக்களுக்கு

அவை பயன்படுகிற அளவிலே கொண்டுவரப்படவேண்டும். அந்த முறையில் இந்தத் திருத்தத்திற்குத் திருத்தம் வேண்டும் என்பதுதான் என்னுடைய கருத்தே தவிர, கோவில்களை எடுத்துவிடவேண்டும், கோவில்களை அழித்துவிடவேண்டும், சமயப் பிரசாரமே இருக்கக்கூடாது என்பது அல்ல. மக்களுக்குப் பக்தி மார்க்கத்தைப் போதிக்கக்கூடாது என்ற கருத்து எனக்கு இல்லை. மக்களுக்காகக் கொடுக்கப்பட்ட சொத்தினால், அதே மக்கள் பாதிக்கப்படுகிறார்களே, அதனால் கஷ்டப்படுகிறார்களே அதன் நன்மை மக்களுக்கு நேரடியாகக் கிடைக்கவேண்டுமே என்ற கருத்திலேதான் இந்தத் திருத்தத்தை கனம் அமைச்சர் அவர்கள் பரிசீலித்து, மக்களுக்குப் பயன்படும் வண்ணம் அதைத் திருத்தியமைக்க வேண்டும் என்று சொல்கிறேன். ஒரு சிலர் இருந்து கொண்டு, மேலும் மேலும் அவர்கள் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போவார்கள், அரசியல் சட்டத்திலே இடம் இல்லை என்று தட்டிக் கழிக்காமல், உண்மையிலேயே மக்களுக்குப் பயன்படுத்த வழிவகை எவ்வளவு இருக்கிறதோ அதை நிச்சயமாகச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால்தான் மக்கள் பயன் பெற முடியும்.

தஞ்சை ஜில்லாவில் கிட்டத்தட்ட 12 ஆயிரம் ஏக்கர் நிலம் தருமபுர மடத்திற்குச் சொந்தமாக இருக்கிறது. 10 ஆயிரம் ஏக்கர் வரையில் திருவாடுதுறை மடத்திற்குச் சொந்தமாக இருக்கிறது. இன்னும் பல மடங்களுக்குப் பல ஏக்கர் நிலம் சொந்தமாக இருக்கிறது. இவையெல்லாம் என்ன ஆவது ? இந்த நிலங்களெல்லாம் இப்பொழுது எதற்காகப் பயன்படுகின்றன ? தருமத்திற்காக அல்ல. சமயப் பிரசாரத்திற்காகவும் அல்ல. அவசியமற்ற காரியங்களுக்கு அவை பயன்படுகின்றனவே தவிர, சமயத்திற்காகவோ தருமத்திற்காகவோ பயன்படவில்லை. இரண்டு மடங்களுடைய வருமானத்திலிருந்து தஞ்சை ஜில்லாவில் எத்தனையோ கல்லூரிகள், பெரிய பெரிய கலாசாலைகள் கட்ட முடியும். அப்படிச் செய்வதை விட்டுவிட்டு, கோயிலை அழகுபடுத்துகிறோம், மடத்தை அழகுபடுத்துகிறோம் என்று பணத்தைச் செலவிட்டுக் கொண்டிருக்கிறார்கள். இல்லாததை வேண்டுமென்றே சொல்லவில்லை. நிரூபிக்க முடியும். சுண்ணாம்பு அடிப்பதற்கு 500 ரூபாய்க்கு டெண்டர் விட்டதை ஆயிரம் ரூபாய் என்று மாற்றுகிற அளவுக்கு ஸ்தாபனங்கள் நடைபெறுகின்றன. ஆகவே, இம்மாதிரி குற்றங்களைக் கண்டுபிடித்து, தரும ஸ்தாபனங்கள் மக்களுக்குப் பயன்படச் செய்யவேண்டும். தனிப்பட்ட கூட்டம், தனிப்பட்ட கூப் மதத்தின் பேரால் வாழ இடம் கொடுக்கக் கூடாது என்பது என் போன்றோரின் கருத்து ஆகும். ஆகவே, இம்மாதிரியான நல்ல காரியங்களைச் செய்வதற்கு அரசாங்கம் முன்வரவேண்டுமென்று கேட்டுக்கொண்டு என் உரையை முடிக்கின்றேன். வணக்கம்.

SRI A. GOVINDASAMY : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, அரசியல் சட்டத்தைத் துணையாக வைத்துக்கொண்டு, மத ஸ்தாபனங்களுக்கு எத்தனை ஏக்கர் தான் உச்ச வரம்பாக இருக்கவேண்டுமென்று ஏற்கனவே நிர்ணயித்ததைக்கூட, இப்பொழுது அறவே நீக்கும் அளவில் புதிதாக இந்த மசோதா வந்திருப்பதைப் பார்த்து உண்மையிலேயே நான் மிகவும் வருத்தப்படுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரசியல் சட்டத்தைத் துணையாக வைத்துக்கொண்டு என்று கனம் அங்கத்தினர் சொன்னார்கள். சாக்காக வைத்துக்கொண்டு செய்வதாகச் சொல்லுகிறாரா என்று அறிய விரும்புகிறேன்.

SRI A. GOVINDASAMY : அதைக் காட்டித்தான் தள்ளப்படுகிறது. அரசியல் சட்டத்தின் 26 (ஸி) பிரிவிலே "To own and acquire movable and immovable property" என்று இருக்கிறது. அந்த பிரிவைக் காட்டி, அதனால் கோயில், மடங்கள் பேரில் இருக்கும் நிலத்தை நாம் கைவைக்கக்கூடாது என்ற அளவிலே இன்றைய தினம் பேசப்படுகிறது.

ஆனால், அரசியல் சட்டத்தைத் திருத்துகின்ற அதிகாரம் மத்திய சர்க்காரின் கையில் இருக்கலாம். இருந்தாலும், ராஜ்ய சர்க்கார் அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுப்போம் என்ற உத்தரவாதம் அளிக்கவேண்டும். அரசியல் சட்டத்தை திருத்துவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்து, கோயில், அற நிலையங்களுக்குச் சொந்தமான நிலங்களை, ஏற்கனவே முடிவு செய்தபடி, எடுப்பதற்கு நடவடிக்கை எடுப்போம் என்று உத்தரவாதம் அளித்தால் நமக்கு ஆட்சேபணை இருக்க முடியாது. தனிப்பட்ட மனிதருக்கு ஒரு சட்டமும், ஆண்டவனுக்கு ஒரு சட்டமும், மடாலயங்களில் மடாதிபதிகளுக்கு ஒரு சட்டமும் இருக்கின்ற நிலைமையைப் பார்த்துத்தான் நான் என்னுடைய கருத்தை வேதனையோடு தெரிவிக்கக்கூடிய நிலைமையில் இருக்கிறேன்.

மடாலயங்களில் ஒழுக்கம் கற்பிக்கப்படுவதாக எதிர்த் தரப்பிலே இருக்கும் ஒரு கனம் அங்கத்தினர் பேசினார். மடாலயத்தில் ஒழுக்கம் எந்த அளவுக்குச் சீர்கேடான நிலைமையில் போய்க்கொண்டிருக்கிறது என்பது அவர்களுக்கே தெரியும். இருந்தாலும், புரிந்து பேச வேண்டியவர் என்ற நிலையில் பேசுகிறாரே தவிர, உண்மை நிலை அவருடைய மனச்சாட்சிக்கே தெரியும். மடாலயங்களில் நடக்கின்ற அக்கிரமங்கள், ஒழுக்கக் குறைவான செயல்கள் அவருக்கும் தெரிந்திருக்கக் கூடும். கோயில்களின் பேரால், மடங்களின் பேரால், நிலங்களை எழுதிவைத்துப் போயிருக்கிறார்கள் எத்தனையோ பேர்கள். அவைகளுக்குத் தருமகர்த்தர்களாக இருந்துகொண்டு, அவைகளில் வரும் வருவாயை அனுபவிக்கக்கூடியவர்களாகப் பல பேர்கள் இருக்கிறார்கள். இந்த நிலையில்தான் இப்பொழுது புதிதாக இருக்கும் இந்த ஷரத்து நீக்கப்படவேண்டும் என்ற கருத்தை எதிர்க் கட்சியில் இருக்கும் நாங்கள் மட்டுமல்ல, ஆளும் கட்சியில் முற்போக்குக் கருத்துள்ள பல பேர் பேசும் நிலைமையைப் பார்க்கிறோம். குறிப்பாக தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்த பல உறுப்பினர்கள் மடாலயங்களில் நடக்கும் அக்கிரமங்களையும், கோயில், மடத்து நிலங்களிலுள்ள விவசாயிகள் எந்த முறையில் பாதிக்கப்படுகிறார்கள், துன்புறுத்தப்படுகிறார்கள் என்பதைப்பற்றியும் தெளிவாக எடுத்துப் பேசினார்கள். இந்த மசோதாவைச் சட்டசபையில் பிரேரேபித்த நாளிலிருந்து இப்பொழுது ஷரத்துவாரியாக எடுத்துப் பேசுகிற நேரத்திலும் இதைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்கிறோம். ஆளும் கட்சியில் உள்ளவர்களே இப்படிப் பேசலாமா என்று ஒரு சிலருக்கு ஆத்திரம் வருகிறது. ஆனால், தஞ்சை மாவட்டத்தில் இருக்கும் சட்டசபை உறுப்பினர்களுக்குத்தான் அங்குள்ள நிலைமை நன்றாகத் தெரியும். ஆகவேதான் அவர்கள் அந்த ஆத்திரத்தோடு அவ்வளவு தெளிவாக எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அதைக் கவனித்து, அரசியல் சட்டத்தைத் திருத்தும்படி மத்திய அரசாங்கத்திற்கு நாம் சிபார்சு செய்கின்ற அளவுக்கு ஒரு நல்ல முடிவுக்கு வந்தால்தான் உண்மையிலேயே உற்பத்தியைப் பெருக்கவேண்டுமென்ற நல்ல நோக்கத்தை நிறைவேற்றியவர்களாவோம். அப்பொழுதுதான் நிலம் பரவலாகப் பிரித்துத் கொடுக்கப்படவேண்டுமென்ற நல்ல நோக்கத்தோடு இந்த மசோதா கொண்டுவரப்பட்டதாகக் கருத முடியும் என்று கூறிக்கொண்டு என்னுடைய உரையை முடிக்கின்றேன்.

*Sri G. NARAYANASWAMI NAIDU : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு முக்கியமான விஷயத்தை நாம் அடிக்கடி மறந்துவிடுகிறோம். கடவுளை மனிதன் படைத்தானா, மனிதனைக் கடவுள் படைத்தானா என்பதைக் கூர்ந்து பார்ப்பதே இல்லை. பாலைவனத்தின் நடுவில் ஒரு கடவுளை வைத்தால் அங்கே யார் போய் வழிபடுகிறார்கள்? இன்றைக்கு தப்பான மத நம்பிக்கையைக் கொண்டு அதையும் சரியாகப் புரிந்துகொள்ளாது தடுமாறுகிறோம். சொத்து இருந்தால்தான் மடங்கள், மடாலயங்கள் காப்பாற்றப்படும். மதம் காப்பாற்றப்படும் என்கிற சித்தாந்தத்தின் அடிப்படையில் பேசுவது காலத்தைக் கோளாறுக்குவது ஆகும். ஆகவே மனிதன் கடவுளைப் படைத்தான், கடவுள்தான் மனிதனைப் படைத்தது என்பதும் வேதாந்தத்தின் முடிவு. தத்துவமசி, அது நீ ஆவாய் ஆத்மா என்றெல்லாம் சொல்வார்கள். கோயிலையோ,

மடத்தையோ, மதத்தையோ காப்பாற்றுவது சொத்தல்ல. மனிதனுடைய ஆத்ம சுத்தியும், பக்தியும் தான் காப்பாற்ற வேண்டும். இப்போது இருக்கிற மடங்களோ, மடத்தின் சொத்துக்களோ இன்றையதினம் நம்முடைய மதத்தைக் காப்பாற்றவில்லை. என்னைவிட இதுபற்றி அறநிலைய பாதுகாப்பு அமைச்சருக்கு இவ்விஷயம் நன்றாகத் தெரியும். சமீபகாலத்தில் மடங்களில் ஏற்பட்ட கற்பழிப்பு காரணமாக ஏற்பட்ட வழக்கும் அதன் காரணமாக ஏகப்பட்ட செலவும் அதை ஈடு செய்ய மடாதிபதி கைலாசம் போய்விட்டு வந்ததும் கனம் அமைச்சருக்குத் தெரியாதது அல்ல. பல உண்மையான—ஊழல் நிறைந்த சம்பவங்கள் எல்லாம் இன்றைய தினம் மறைக்கப்படுகிறது. மாயவரத்தில் இருக்கிற பெரிய வக்கீல்களுக்கு வரும்படி—மதப் பிரசாரம் வெளியில்—உள்ளே திரை மறைவில் ஊழல். நாம் ஒன்றை யோசிக்க வேண்டும். பனிரண்டு ஆயிரம் ஏக்கரையும், கிட்டத்தட்ட பனிரண்டாயிரம் மக்களையும் ஒருவரிடத்தில் ஒப்படைக்கிறபோது அவருக்கு என்ன தகுதி இருக்கிறது என்று பார்க்க வேண்டும். நேற்று வரை அன்னக்காவடி தருமம் தாயே என்று இருந்தவர்களை—பண்டார சந்நிதி என்று பெயர் சூட்டி ஒரு சொம்பு ஜலத்தைக் கொட்டி நீதான் ஆதீனம் என்று அவன் கையில் பன்னிராயிரம் ஏக்கர் நிலத்தையும் மக்களையும் ஒப்படைப்பது சரியா? எந்தத் தகுதியும் அற்றவர்கள் கையில் சொத்திருந்தால் நன்மையைவிட தின்மைதான் கடுமையாகும். துறவிகள் மண்ணாசையும், பொன்னாசையும், பெண்ணாசை இவற்றை துறக்க வேண்டும் என்பார்கள். ஆனால் நாமோ இந்தப் பண்டார சந்நிதிகள் கையில் பொன்னையும், பொருளையும், நிலத்தையும் கொடுத்து, மண், பெண், பொன் இவை மூன்றையுமே ஆளும்படியாக செய்கிறோம். இந்த நிலையில் ஒழுக்கம் மட்டும் எப்படி உண்டாகும். பணம் இருந்தால் சாதாரணமாக ஒருவன் ஒரு விரலுக்கு மோதிரம் அணிந்து கொள்வான். எங்கள் தஞ்சை ஜில்லாவுக்கு வந்து பாருங்கள். சந்நிதானம் பத்து விரலுக்கும் மோதிரம் அணிந்துகொண்டிருக்கும் காட்சியைக் காணலாம். அது போட்டுக்கொண்டிருக்கிற மகரகண்டிகை மட்டும் பல லட்சம் இருக்கலாம். கொஞ்சம் பொறுமானம் கூடவோ அல்லது குறைந்திருந்தாலும்கூட மதத்தைக் காப்பாற்றி நாட்டில் பக்தியை பரப்புவதற்கு இத்தகைய சொத்து அவசியமில்லாதது. அவர்களை மேலும்மேலும் பாபத்தைச்செய்ய தூண்டக்கூடியது. சொத்துடமை, இப்படி சொத்துக்களை குவித்து நம்முடைய மதத்திற்கு இழுக்கு தேடக்கூடாது என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். யாரோ ஒருவர் கடைசிக் காலத்தில் யாரோ ஒருவருக்கு பட்டம் சூட்ட அவர் பண்டாரமாவதும், அவரிடம் 12,000 ஏக்கரையும் பல லட்சம் ரூபாயையும், ஆயிரமாயிரம் குடும்பங்களின் வாழ்வையும் ஒப்படைப்பது ஜனநாயகமா? இது என்ன பரம்பரையாக வந்த சொத்தா?

இவ்விடம் வந்திருக்கும் நாம் எல்லோரும் மனிதர்கள், ஓட்டுப் போட்டுத்தான் வந்திருக்கிறோம். தெய்வங்களோ தேவதைகளோ ஓட்டுப் போட்டு வரவில்லை—மதமும்—பெரியவர்களின் ஆசிகளும் நம்மை இந்த இடத்திற்கு கொண்டு வர முடியாது.

வேண்டுமானால்—தெய்வத்தின் பெயரால் மடத்தை ஆதரித்து—கோவிலை ஆதரித்து எங்கள் ஜில்லாவிலே தேர்தலுக்கு யார் வேண்டுமானாலும் நிற்கட்டும்—அவர்களை நானே தோற்கடிக்கிறேன்.

நல்ல காரியங்கள், நடக்கத்தானே ஜனநாயகம்—அக்பர் நல்லவர் என்பதற்காக ஔரங்கசீப்பை—ஆதரிக்க முடியுமோ எந்த காலத்திலோ, நல்ல பண்டாரம் இருந்ததற்காக, ஒழுக்ககேடும், கீழ்தர ஆசையும், வீண் விரோதங்களையும் வளர்க்கும் இப்போதைய பண்டார சந்நிதிகளை ஆதரிக்க வேண்டுமா? அவர்கள் செய்யும் சில நல்ல காரியங்கள், மதப் பிரசாரங்கள், பக்தி சார்பான மாநாடுகள் இவைகள் எல்லாம் அந்த அந்த துறையில் அவர்களுக்குள்ள ஆர்வத்தால் நடத்தப்படுவதால் அல்ல, அவர்கள் செய்யும் சில தப்பான காரியங்களை மறைக்க செய்யும், திறமையான பிரசாரம் என்பதை மறுக்க வேண்டாம். நித்தம் தன் சரீரத்தை விற்கும்

விலைமாது சாவித்திரி வேஷம் போட்டு, கற்பு நிலையைபற்றி நல்ல பாட்டுக்கள் பாடுவதால், அந்த அம்மாளை பத்தினித் தெய்வமென யாராவது கூறுவார் உண்டா ?

இப்படிப் பேசுவதால் அவர்களுக்கு பண்டாரங்களுக்கு கோவில்களுக்கு எதுவும் செய்யக்கூடாதென்பதல்ல—காலத்திற்கு ஏற்ப, கோவில்களும், மடங்களும் அதிக செலவு செய்தாலும் கவலையில்லை—அன்றாட பழக்கமான எல்லாக் காரியங்களும் நன்றாக நடக்கட்டும்—ஆனால் நிலத்தை இந்த ஸ்தாபனங்களிடம் விட்டு வைக்காதீர்கள்—மறைமுகமாக நிலபிரபு பீகத்தை வளர்க்கும் பண்ணையாக—கோவிலும், மடமும் மாறிவிடும். ஆதலின்—நிலம், உழவர் இருவரும் விடுதலை அடைய—இந்த ஸ்தாபனத்திடமிருந்து எடுத்து உழவரிடம் நிலத்தை ஒப்புவித்து அடிமைப்பண்ணை வளர்க்கும் இந்த ஸ்தாபனத்திற்கு பணமாக, மாதா மாதம் அளியுங்கள், என்று கேட்டுக் கொள்ளுகிறேன். சேக்கிழார், அப்பர், நாவுக்கரசர் போன்றவர்கள் எல்லாம் திருநீறு, ஜாலரா இவற்றை மட்டும் கொண்டு நாடு பூராவும் சுற்றி பக்தியைப் பரப்பினார்கள். சைவத்தை வளர்த்தார்கள். ஆனால் இன்றைய தினம் பண்டாரங்களிடம் சொத்தைக் கொடுத்து அதன் காரணமாக நாட்டில் ஒழுக்கக்கேட்டை வளர்த்துக்கொண்டிருக்கிறோம். அவர்களிடத்திலிருந்து சொத்தைப் பிரித்துவிட வேண்டும். பக்தியை வளர்ப்பதற்கும், கர்மானுஷ்டானங்களை செய்வதற்கும் இப்பொழுதிருக்கும் அளவைவிட அவர்களுக்குத் அதிகமாக தேவையிருந்தால், நீங்கள் வேண்டுமானால் பட்ஜெட் போட்டுக் கொடுங்கள், மிராசுதார் மனப்பான்மை அவர்களிடத்தில் வரும்படியாக செய்யக்கூடாது. முக்கியமாக இந்த சட்டத்தில் அந்த நிலங்களுக்கு விதிவிலக்கு அளிக்கக்கூடாது. அம்மடங்களுக்கு சொத்து எப்படிச் சேர்ந்தது என்பது நமக்குத் தெரியும். ஏதோ பாரம்பரியமாக வந்ததாகச் சொன்னார்கள். மாயவரத்திற்கு இருக்கும் மாயூரநாத சாமியை எண்ணூறு ரூபாய்க்கு வாங்கினார்கள். 3,000 ரூபாய்க்கு குமரக் கட்டளை தேவஸ்தானத்தை வாங்கினார்கள், சொத்தைப் பெருக்கிக் கொள்ள வேண்டுமென்பதற்காகவே வாங்கினார்கள். இப்படி அவர்களுக்காக சொத்தை விடக்கூடாது. சொத்தை பிரித்து அந்த நிர்வாகம் ஒழுங்காக நடப்பதற்கு வேண்டிய தொகையை நாம் பட்ஜெட் போட்டு ஒதுக்க வேண்டும். சர்க்காரைவிட நம்பிக்கையான ஸ்தாபனம் வேறொன்றும் இருக்காது. ஆகவே இம்மாதிரி விதிவிலக்கு அளிக்கக்கூடாது என்று பலகாலமாக வற்புறுத்தி வந்ததை இப்பொழுதும் வற்புறுத்தி என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

**Sri S. NAGARAJA MONIGAR** : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இந்த நாட்டில் அநேக முன்னேற்றங்களை செய்து வந்திருக்கிற நாம் இப்போது இதைச் செய்கிற பொழுது இந்த திருத்தத்தை எதிர்க்கிறேன். நண்பர் நாராயணசாமி நாயுடு அவர்கள் மிகவும் உருக்கமாக இருப்பதை அல்லது இருப்பதாக நினைத்துக்கொண்டிருப்பதை பேசிய பின் நான் சில விஷயங்களை சொல்லாமல் இருப்பதற்கில்லை. கடவுளை பாலைவனத்திற்குள் வைத்தால் செல்வார்களா ? என்று கேட்பது அவ்வளவு சரியல்ல. மனிதன் செல்வதற்கு கூட முடியாத இடங்களிலெல்லாம் கோயில் கட்டியிருக்கிறார்கள். இன்னும் பத்ரிநாத் போன்ற இடங்களுக்கு சென்றவர் திரும்பாமலே இருக்கிறபோதுகூட சென்று கொண்டேயிருக்கிறார்கள். ஆகவே அதற்கும் இதற்கும் சம்பந்தமில்லை. எல்லா உடமையும் பொது உடமையாகவே இருக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அபரிமிதமான நிலங்களை இந்த சர்க்காரே எடுத்து நடத்துவது என்றும் பேசப்படுகிறது. இதைப்பற்றியெல்லாம் சட்டமாகக் கொண்டுவந்தால் ஹிந்து மதத்தையோ, முஸ்லிம் மதத்தையோ அடியோடு அழிக்கும் திட்டமாக இருக்கும் என்று சொல்ல விரும்புகிறேன். ஆகையால் இப்பொழுது கொண்டுவந்திருக்கும் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன் என்று சொல்லிக் கொண்டு என் வார்த்தையை முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri V. K. KRISHNAMURTHY** : அவைத் தலைவர் அவர்களே, இந்த நில உச்ச வரம்பு சீர்திருத்த மசோதாவின் 2-வது பிரிவு முதலில் 200 எக்கர் இருக்கவேண்டுமென்றும் பின்னர் பொறுக்குக்

குழுவிற்கு அனுப்பிய பின்னர் மக்களின் கருத்துக்களை அறிந்த பின்னர்—கோயில், ஆதீன, மட நிலங்களை எடுத்துக்கொள்ளக்கூடாது என்ற முடிவிற்கு வந்த அமைச்சரவையைப் பாராட்டுகிறேன்.

உலகம் இருகூறு. இறைநெறியை இணைத்த சமுதாயம்—இறைநெறியை இரித்த சமுதாயம்—பொதுவாக இந்தியாவும் சிறப்பாக தமிழ்நாடும் இறை நெறியை இணைந்த சமுதாயமாகத் தொன்மை காலந்தொட்டுத் திகழ்கிறது.

புறச்சமய நெறிகள் நுழைந்து இறை இயலை எதிர்த்த பின்னர் இறை நெறியாளர்கள் இறைநெறி இன்றியமையாததென்றுணர்ந்து நிலங்கள் சொத்து—பொருள்கள் மடங்களுக்கும்—ஆதீனங்களுக்கும்—கோயில்களுக்கும் வைத்தார்கள். அறம்—ஒழுக்கம்—பண்பு—கலை—பக்தி—இலக்கியம்—ஞானம் முதலியவைகளைச் சீர்பெற வளர்த்தார்கள். ஆங்கிலத்தில் பழமொழி :

**“ If a fool throws a diamond into the ocean thousand wise men can never bring it out ”** ஒரு மடையன் வைரத்தை கடலில் எறிந்தால் எல்லா வைரங்களையும் கடலில் எறிவதையொக்கும், ஒரு மடாதிபதி தவறு செய்வதாலே.

இறைநெறி—இலக்கண—இலக்கிய—ஞான நூல் தொடர்பு கொண்டு சமுதாயத்தில் இணைந்துள்ளது, இதையறியாதார் இன்னலுற இயம்புகின்றனர். “ சிறந்தது பயிற்றல் இறந்ததன் கடன் ”, என்று தொல்காப்பியரும் “ சிறப்பென்னும் செம்பொருள் காண்பதறிவு ” என்று திருவள்ளுவரும், “ செம்மலர் நோன்றாள் . . . . . . . மாலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயம் தானும் அரன் எனத்தொழுமே ” என்று சிவஞானபோதத்தைப்படைத்த மெய்கண்டாரும் கூறியிருப்பதை நோக்கின் உண்மை நன்கு விளங்கும். சில வேடம் பூண்டவரும்—திருக்கோயிலும் அரண் என்றுதான் மக்கள் கருதவேண்டும் என்பது தமிழ் நாகரீகத்தின் முடிந்த முடிவு. ஆதலால் இறைநெறி வளர்ச்சிக்கு அரசாங்கம் அரன் செய்ய முடியவில்லை காரணம் செக்கியூலார் ஸ்டேட், சமய வளர்ச்சிக்கு அரண் செய்யாத அரசாங்கம் அழிவுக்கும் அரசாங்கம் அரண் செய்யாமல் ஒதுங்கி இருத்தல் நல்லது பயக்கும். இறைநெறி வளர்ச்சி ஆன்ம நேயத்தாலும்—வழிபாட்டாலுமே நடைபெறும், பொருள் தேவை இல்லை என்று அன்பர் கூறுகிறார். தெய்வப்புலவர் சேக்கிழாரின் பெரிய புராணம் திருக்கோயிலில் அருளப்பெற்றதெனினும் அது மக்களுக்கு அளிக்கையில் அச்சு எறி வரவேண்டுமாதலால் பொருளின்றி வராது. இத்தகைய அறப்பணிகளுக்குப் பொருள் தேவை என்பதையுணர்ந்தே அக்கால மெய்யன்பர்கள் நிலம்—பொருள்—சொத்து முதலியன திருக்கோயில்கள்—திருமடங்கள்—திரு ஆதீனங்கள் இவைகளுக்கு வைத்தனர்.

தமிழ்—கலை—மொழி—இசை—ஒழுக்கம்—பக்தி இன்னபிற மடங்கள் தான் வளர்த்தன. சித்திரக்கவிகள் திருக்கோயிலன்றோ அருள்வாக்காக விளங்கின. 13-ம் நூற்றாண்டிலன்றோ இவைகள் இலங்கின. இச்சித்திரக் கவிகள் பல்கலைக்கழகங்கள்—பகுத்தறிவு மன்றங்கள்—இலக்கிய மன்றங்கள்—புலவர்கள் படைக்கவில்லை. படித்து மற்றவர்களுக்கும் பகரவுமில்லை. 19-ம் நூற்றாண்டில் இவையொத்த சித்திரக் கவிகள் மடங்களில் தான் மலர்ந்தன, அதற்குப் பிறகு இன்றலவும் எவரும் படைக்கவில்லை. மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் தான் 18-ம் நூற்றாண்டிலே சித்திரக்கவிகள் படைத்தார். மடங்களின் உதவி இவருக்கிருந்தது என்பதை உணரவேண்டும்.

தமிழ் உரை நடையின் மூலம் திருமடங்களிலன்றோ மாதவச் சிவஞான யோகிகளின் உரைநடைதான் தமிழ் உரைநடைக்கு மூலம். ஆதலால் மடங்கள் சீரிய அறப்பணிகள் ஆற்றி வருகின்றன, மடங்கள் இல்லை எனில் இவ்வளர்ச்சிக்கு இடமில்லை.

19th September 1961] [Sri V. K. Krishnamurthy]

இத்தகைய நன்மைகளை எதிர்நோக்கி அன்றைய இறைநெறியன்பர்கள் கோயில்கள்—மடங்கள்—ஆதீனர்களுக்குப் பொருள்—சொத்து—நிலம் வைத்தார்கள். இவர்களின் குறிக்கோள் நிறைவேற அமைச்சரவை அரண் செய்யவேண்டும். நிலங்கட்டு விதிவிலக்களித்தமைக்கு யான் பாராட்டுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மடங்களுக்கும் கோவில்களுக்கும் சொந்தமான நில உடமைகளுக்கு உச்சவரம்பு கட்டுவதா இல்லையா என்பது பெரிய பிரச்னையாக இருக்கிறது. உண்மையிலே இந்த மடங்கள், கோவில்கள் நிலங்களுக்கு விதிவிலக்கு கொடுப்பது என்பது விவசாய மக்களுக்கு பெரிய அளவிற்கு தீங்கிழைப்பதாகும். மடத்தைப்பற்றி நண்பர்கள் பேசினார்கள். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் மண், பொன், பெண் ஆசைகள் இம்மூன்றையும் துறந்தவர்களுக்கு, மேல் உலகத்திற்கு வழிகாட்டுகிறோம் என்று சொல்லுகிறவர்களுக்கு என் இவ்வளவு தேவை என்று கேட்க விரும்புகிறேன். இவர்கள் நல்ல முறையில் நடக்கிறார்கள், ஏதோ ஒன்று இரண்டு பேர்கள் தான் தவறு செய்திருக்கிறார்கள். இப்பொழுது ஒன்று இரண்டு பேர்கள் கூட நல்லவர்கள் இருக்க முடியாது என்பதை தஞ்சாவூர் ஜில்லாவில் இருக்கும் நண்பர்கள் அறிவார்கள். சவுக்கடி சந்திரகாந்தா படத்தைப் பார்த்தவர்கள் அவர்கள் எந்த அளவில் நடந்துகொள்ளுகிறார்கள் என்பது நன்றாகப் புரியும். இந்த நிலைமையில் எதற்காக விதிவிலக்கு அளிக்க வேண்டுமென்பது புரியவில்லை. முன்பு ஜனத்தொகை மிகவும் குறைந்த அளவில் இருந்த காலத்தில், குழந்தைகள் பள்ளிக்கூடம் செல்லாதகாலத்திலே . . .

SRI T. KARIA GOUNDER : நண்பர் சவுக்கடி சந்திர காந்தாவைப் பற்றி வியாக்கியானம் செய்தால் நன்றாக இருக்கும்.

DEPUTY SPEAKER : வியாக்கியானம் இங்கு வேண்டியதில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : வியாக்கியானம் செய்யத் தயாராய் இருக்கிறேன். தலைவர் அவர்கள் அதற்கு அவகாசம் கொடுக்கவில்லை. நீண்ட காலத்திற்கு முன்னால் பாடசாலைகள் இல்லாத காலத்திலே, மருத்துவ மனைகள் இல்லாத காலத்திலே குறிப்பிடப்பட்டிருப்பதை நாம் பார்க்கிறோம். ஆனால் இப்பொழுது எங்கு பார்த்தாலும் மருத்துவ மனைகளும், பள்ளிக்கூடங்களும் திறந்து வைத்திருக்கிறார்கள். இந்தக் காலத்திலே கொஞ்சம்கூட பொருத்தம் இல்லாத அளவிற்குத்தான் இருக்கிறது, அதிலும் குறிப்பாக பர்த்கன்ட்ரோல் என்று சொல்லச்கூடிய இந்தக் காலத்திலே, இன்றைக்கு நம் சமுதாயம் மேலும் வளரவேண்டும் என்று விரும்புகின்ற இந்தக் காலத்திலே மடங்களுக்கு விதி விலக்கு அளிக்கவேண்டுமென்று சொல்லுகிறார்கள். ஆகையால்தான் பல சீர் திருத்தங்கள் கொண்டுவரவேண்டும் என்று எழுதியிருக்கிறார்கள். நிலச் சுவாந்தார்களும், மடாதிபதிகளும் ஒழித்துவிடவேண்டுமென்று சொன்ன போது ஸ்ரீ பட்டாபி சீத்தாராமய்யா அவர்கள் சமஸ்தானாதிபதிகளின் லீலாவிநோதம் என்று ஒரு புஸ்தகத்தை எழுதினார்கள். அந்த லீலா விநோதத்தைவிட இந்த மடாதிபதிகளின் லீலாவிநோதம் இன்னும் அதிகமாக இருக்கும். இது பொறுக்குக் கமிட்டிக்கு வந்த பிறகு தான் சட்டத்தைத் கொண்டுவருகிறோம் இல்லையென்றால் சுப்ரீம் கோர்ட்டுக்குப் போய்விடுவார்கள் என்று சொன்னார்கள். குடியிருப்பு மனையில் இருந்து வெளியேற்றவில்லை. 18-ம் தேதி சட்டசபை ஆரம்பிக்கும் முன்னால் கொண்டு வருகிறோம் என்று சொல்லி ஏமாற்றம் அடைந்தோம். இந்த நிலைமை இப்படியிருக்கிற காரணத்தினால் அவசியம் இந்த மடங்களுக்குச் சொந்தமாக இருக்கும் நிலத்தை யார் யார் பாடுபடுகிறார்களோ, யார் யார் உழுது பயிரிடுகிறார்களோ அவர்களுக்கே சொந்தமாக அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும்.

10–30 a.m. அதேபோன்று, சட்டம் வருகிறது என்பதை உணர்ந்து குடியாத்தம் தாலுகாவில் கீழ்விளாச்சி பிர்க்காவில் தர்ம ஆதாயத் தோப்பு அல்லது ராஜாத் தோப்பு என்று சொல்லுவார்கள். அங்கு 49 எக்கர் இதுவரை பொதுவாக இருந்தது. கால்நடைகளின் தீவனத்திற்கு அது உதவிகரமாக யிருந்தது. அதன் சுற்று வட்டாரத்தில் உள்ள 10, 15 கிராமங்கள் அதனுல் வாழ்க்கை நடத்தி வரக்கூடிய அளவிற்கு நிலைமை இருந்தது. மிகப் பெரிய மரங்களைக் கொண்ட தோப்பு அது. அதை வெட்டி விற்றுலே 50,000 ரூபாய்க்கு போகும். அந்த 40 எக்கர் 50,000 ரூபாய்க்கு மேல் மதிப்புடையது. கனம் அமைச்சர் அவர்களுக்கும் இது சம்பந்தமாக எழுதப்பட்டிருக்கிறது. இந்தச் சட்டம் கொண்டு வந்தால் அந்த தர்ம ஆதாயத் தோப்பு என்னவாகும் என்று சொல்லி ஒரு பெரிய பஸ் முதலாளி தன்னுடைய குமாஸ்தாவின் பேரில் அது 14,000 ரூபாய்க்கு விக்கிரயமாயிருக்கிறது. இதனுல் அவருக்கும் அந்தக் கிராமத்தில் உள்ளவர்களுக்கும் தகராறு ஏற்பட்டு ஹைகோர்ட் வரை வந்திருக்கிறது. ஆகவே, எப்படி நிலப்பிரபுக்கள் எல்லாம் பினமி மாற்றம் செய்யும் முறையில் தங்கள் சொத்துக்களை எழுதி வைப்பதற்கு எப்படி கனம் அமைச்சர் அவர்கள் சென்ற பல வருட காலமாக அவகாசம் கொடுத்து மாற்றி எழுதி வைப்பதற்கு உதவிகரமாக இருந்தார்களோ அதே போன்று மடாதிபதிகளும், கோவில்களும் பினமி மாற்றம் செய்ய அவகாசம் கொடுக்கிறுரோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆக, கோவில், மடம் நிலங்களுக்கு விதி விலக்கு இருக்கக் கூடாது. அதை கண்டிப்பாக எடுத்தாகவேண்டும். அதை, சர்க்கார் வேண்டுமானுல் எடுத்துக்கொள்ளட்டும். பாடசாலை, ஆஸ்பத்திரி அல்லது இது போன்று எதுவாகயிருந்தாலும் அதை நடத்தும் பொறுப்பை சர்க்கார் தன் கையில் வைத்துக்கொள்ளட்டும். வேண்டாமென்று சொல்லவில்லை. அப்படிச் செய்தால்தான் விவசாய மக்களுக்கு ஏதாவது நன்மை செய்ய முடியும். பிள்ளை பேரைச் சொல்லி பூதம் முழுங்கியது என்று கிராமங்களில் சொல்வார்கள். அதே போன்று, நீதியைப் பற்றி, தர்மத்தைப்பற்றி பேசி கோவில்கள், மடாதிபதிகள் இந்த நிலங்களை தாங்களே அனுபவிக்க விடுவது மோசமான போக்காகும். ஆகவே, இவைகளுக்கும் வரம்பு கட்டியாகவேண்டுமென்று சொல்லிக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

**SRIMATHI T. N. ANANDANAYAKI:** கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கோவில்களுக்கும் மடங்களுக்கும் சொத்து இருக்கலாமா, கூடாதா என்ற பிரச்னையை மிகத் தீவிரமாக இந்தச் சபையில் பல அங்கத்தினர்கள் அலசிப் பார்த்தார்கள். மதங்களின் வரலாற்றைக் கூட மனம் போன வழியில் தீட்டிக் காட்டினுர்கள். யாரோ கொடுத்த பணத்தை விழுங்கி மடம் வந்து விட்டதென்று. மக்களாக, மதத்தைப் பரப்புவதற்கு பல முறைகளை, பல வழிகளைக் கையாண்டார்கள். எப்படி பரப்பவேண்டுமென்பதை, அவரவர் கருத்திற்கேற்ப ஏற்றுக்கொள்ளலாம். அப்பர் மாதிரி விபூதிப் பையோடு போய் பிரசாரம் செய்யலாம். மடங்களை ஏற்படுத்தி அங்கு மடாதிபதிகளை உட்கார வைத்து மத உணர்ச்சிகளைப் பரப்பச் செய்யலாம். கோவில்கள் இல்லாமலேயும் வழிபடலாம். கோயில்களில் ஆண்டவனைச் சின்னமாக வைத்து பூஜைகள் செய்து அதன் மூலமாகவும் வழிபடலாம் என்று பலவித ஜனநாயக வழிகளைக் கொண்டது தான் ஹிந்து மதம் என்று சொன்னுல் அது மிகையாகாது. ஆக, ஒரு முறையில்தான் செய்யலாம், பல முறைகளைக் கையாளக்கூடாது என்று சொல்வது, ரெஜிமெண்டேஷன் முறையில் ஒரு விதத்தில்தான் செய்யலாம் என்று சொன்னுல் இந்தப் பிரச்னைக்கே இடம் இருக்காது. ஆக, பல வழிகளில், பல துறைகளில் சமய உணர்ச்சியை சமுதாயத்தில் பரப்ப வேண்டுமென்ற எண்ணத்தோடு, ஆசையோடு மக்கள் தங்கள் இஷ்டப்படி சொத்துக்களைக் கொடுத்து மடாதிபதிகளை ஏற்படுத்தி மக்களுக்கு நல்ல பழக்க வழக்கங்களை ஏற்படுத்தவேண்டுமென்ற நிலையை ஏற்படுத்தினுர்கள். மடங்களில் தவறு ஏற்படாது, மடாதிபதிகள் தவறே செய்யாமல் இருப்பார்கள் என்று நான் அவர்களுக்காக வக்காலத்து வாங்கிப் பேசவில்லை. மடாதிபதிகள் மட்டும் தவறு செய்யாமலிருந்தால் போதாது, எந்த

19th September 1961]. [Srimathi T. N. Anandanayaki]

மனிதனும் தவறு செய்யாமல் வாழ வேண்டுமென்பதுதான் சமுதாயத்தின் விருப்பம். மடாதிபதிகள்தான் ஆசையைத் துறந்து விட வேண்டும். மற்றவர்கள் என்ன அக்கிரமங்கள் வேண்டுமானாலும் செய்யலாம் என் பதை யாரும் ஒத்துக்கொள்ளவில்லை. மனிதனின் குறைகளை விட மடாதி பதிகளின் குறைகள் வெகுக் குறைவாக இருப்பதால்தான் நல்லதைப் போதிக்க அவர்களை அங்கு அமர்த்துகிறோம்-தவறு நடக்கிறதென்றால், அதை சட்டம் போட்டு திருத்துவது சரியல்ல. மக்களால் தான் அதைத் திருத்த முடியுமே தவிர சட்டம் போட்டு திருத்தி விடலாம் என்றால் அது கடைசியில் அவதியில் தான் கொண்டு போய் விடும் என்று நான் சொல்லவில்லை. ஆங்கிலேய சாம்ராஜ்ய அரசி விக்டோரியா ராணி அவர்கள் இந்த நாட்டின் பொறுப்பை ஏற்றபோது, மத உணர்ச்சியில் நான் கை வைக்கமாட்டேன் என்றார்கள். சட்டசபையில் 200 பேர்கள் இருந்துகொண்டு வெளியில் இருப்பவர்கள் நம்மை விட புத்தி குறைவானவர்களென்று, சட்டம் கொண்டு வந்தது சமுதாயத்தின் குறையைத் தீர்த்து விடுவோம் என்று சொன்னால் அவர்கள் அவர்களது நிலையைத் தவறாக எடை போடுகிறார்கள் என்று தான் எண்ணவேண்டும். இது சட்டசபை அங்கத்தினர்களைச் சார்ந்த தல்ல. மக்களைச் சார்ந்தது, குறிப்பாக ஹிந்து சமுதாயத்தைச் சார்ந்தது. மடங்களுக்கு மட்டுமல்ல சொத்துக்கள் இருப்பது. கிறிஸ்தவர்களிடம் இல்லையா சொத்து? மஹமதியர்களிடம் இல்லையா சொத்து? வேறு மதத்தைச் சார்ந்தவர்களிடம் இல்லையா சொத்து? ஆக, ஹிந்து கோவில்களை, மடாதிபதிகளை பாழ்படுத்த வேண்டுமென்று சொல்வது சரியல்ல. மத உணர்ச்சியைப் புண்படுத்தும் விதத்தில் ஒருவர் பேசினால் அடுத்தபடி பேசுபவர் அதை விட தீவிரமாக புண்படுத்திப் பேச முடியும். பல்லக்கில் போனவர்கள் இன்று ப்ளேனில் போகிறார்களே என்றால், எங்கேயோ உட்கார்ந்திருக்கிறோம், இப்பொழுது பானின் கீழ் உட்கார்ந்திருக்கிறோம். காலம் மாறுவதற்கேற்ப எல்லாம் மாறிக்கொண்டு தான் போகும். கோவில் கள் அல்லது மடாதிபதிகள் சொத்துக்களை தவறான பாதையில் செலவழிக் கிறார்கள் என்றால், அந்த குற்றம் நம்மைச் சார்ந்ததே தவிர, பொது மக்களைச் சார்ந்ததே தவிர, அரசாங்கத்தையோ அல்லது நிர்வாகத்தையோ சார்ந்ததல்ல அது. தக்க பாதுகாப்பு அளிக்கக்கூடிய விதத்தில் தான் ஹிந்து மத பரிபாலனச் சட்டத்தைப் போட்டிருக்கிறோம். அதன்படி, கோவில் சொத்தை கணக்கெடுத்து ஆண்டொன்றுக்கு இவ்வளவு தான் செலவிடலாம் என்று திட்டம் கொடுத்து, மடாதிபதிகள் திட்டத்தை மீறி காலணா கூட செலவு செய்யக்கூடாது என்று வரையறுத்து, மிகுதிப் பண த்தை கல்வி போன்ற செக்குலர் பர்பஸுக்கு செலவழிக்கலாம் என்று சட்டம் போட்டு நடத்திக்கொண்டிருக்கிறோம். திருப்பதி வெங்கடேஸ்வரனுக்கு காணிக்கை செலுத்துகிறார்கள். அதை அவர் சாப்பிடவில்லை. அந்தப் பணத்தைக் கொண்டு "வெங்கடேஸ்வரா யூனிவர்ஸிடி" நடத்தப்படுகிறது. பல நல்ல காரியங்களுக்காக அந்தப் பணத்தை உபயோகிக்கிறார்கள். பல சாஸ்திரங்கள் செய்கிறார்கள். அதுபோல அல்லாது, அடித்தளத்தில் உள்ளவர்களிடமிருந்து சந்தாப் பணம் வாங்கிக்கொண்டு உல்லாச வாழ்க்கை நடத்தும் அரசியல் மடாதிபதிகள் இன்றும் இருந்து கொண்டிருக்கிறார்கள். மடாதிபதிகள் எல்லாத் துறைகளிலும் தான் இருக்கிறார்கள். அரசியல் மடாதிபதிகள், கலைத் துறை மடாதிபதிகள், மத மடாதிபதிகள் ஆக பல மடாதிபதிகளைப் பார்க்கிறோம். ஆக, மடாதிபதிகளைப் பற்றி குறை கூறும் இந்த மடாதிபதிகள் தங்களிடமுள்ள குறைகளை முதலில் நீக்கிக்கொள்ளட் டும். பின்னர், இவர்கள் குறைகளை நீக்க முன்வரலாம். இன்று கிருஸ்தவ மிஷன்ஸ் இருக்கின்றன. வாக்ப் போர்ட் இருக்கின்றன. அவர்களிட மும் எவ்வளவோ சொத்துக்கள் இருக்கின்றன. லயோலா கல்லூரி நல்ல வழியில் படிப்பை பரப்புகிறார்கள். கோயில், மடங்கள் சொத்துக்களை கணக் கெடுத்து பூஜை, வழிபாடு போன்ற காரியங்களுக்கு இவ்வளவு செலவழிக் லாம், தர்ம காரியங்களுக்கு இவ்வளவு செலவழிக்கலாம், இந்த இந்த வழிகளில் செலவழிக்கலாம், மீதிப் பணத்தை கல்லூரி, கலாசாலைகள், ஆஸ்பத்திரிகள் போன்றவைகளுக்காக செலவழிக்கலாம் என்று சட்டம் போடலாம் என்ற நல்லெண்ணத்தோடுதான் இப்பொழுது இதை நீக்கி விட்டு தனியாக அதற்கு ஒரு சட்டம் கொண்டு வரலாம் என்று நினைக்கிருக் கிறார்கள் பொறுக்குக் கமிட்டியினர்.

இதில் என்ன தவறு நேர்ந்து விட்டது என்று தெரியவில்லை. அது மட்டுமல்ல, தனி நபர்களுக்கு மட்டும் அதிகமான அளவில் நிலங்கள் இருக்கக்கூடாது என்று சொல்லும்போது, கடவுள் கையில் மட்டும் நிலங்கள் இருக்கலாமா என்று கேட்கப்படுகிறது. தனி நபர்களின் கையில் சொத்து இருந்தால் அவர்களுடைய குடும்பத்திற்கு மட்டும் தான் அந்தச் சொத்து பயன்படும். ஆனால் கடவுளின் பெயரில் சொத்து இருந்தால் அதை அரசாங்கம் எடுத்து கூட்டுறவுப் பண்ணை போன்றவைகள் நடத்த முடியும். தஞ்சை ஜில்லாவை எடுத்துக்கொண்டால் எத்தனையோ இடங்களில் கோவில் களின் சொத்தை எடுத்து கூட்டுறவுப் பண்ணை அமைத்து மக்கள் பயன் பெறத்தக்க முறையில், நல்ல முறையில் நடந்து வருகிறது. ஆகவே, நாளைக்கு அரசாங்கம் நினைத்தால் எல்லா கோயில்களினுடையவும், மடங் களினுடையவும் சொத்தை எடுத்து கூட்டுறவுப் பண்ணை அமைக்க வேண்டும் என்று முடிவு செய்யும்போது யாரும் அதை ஆட்சேபிக்க முடியாது. கோவிலில் இருக்கின்ற கடவுளும் ஆட்சேபிக்க முடியாது. அப்படியிருக்கும் போது யார் மேலோ கோபத்தை வைத்துக்கொண்டு, நுனி மரத்தில் இருந்துக் கொண்டு அடிமரத்தை வெட்டுவதைப் போல் எதையோ பேசிவிட்டு போகின்றவர்களின் புத்தியை என்ன சொல்வது என்று தெரியவில்லை. அது மாத்திரமல்ல, தஸ்திக் அலவன்ஸ் கொடுக்கலாம் என்று சொல்லப் பட்டது. அவ்விதம் நாம் நிறைவேற்றுவோமேயானால் இன்றைக்கு மதத் தின் பேரிலும், கோவிலின் மீதும் நம்பிக்கை இருக்கின்ற அரசாங்கம் இந்த அலவன்ஸைக் கொடுத்துக்கொண்டிருக்கலாம். ஆனால், நாளைக்கு கோவி லும் வேண்டாம், கடவுளும் வேண்டாம், சாமியும் வேண்டாம், ஆசாமிகள் மட்டும் இருந்தால் போதும் என்று நினைக்கின்றவர்கள் அரசாங்கத்தில் வரும்போது இந்த அலவன்ஸை ஆசாமிகளுக்குத்தான் கொடுப்பார்களே தவிர ஆண்டவனுக்குக் கொடுக்க மாட்டார்கள். ஆகவே, இதில் போடப் பட்டிருக்கின்ற ஷரத்து மிகவும் அவசியமான ஷரத்துத்தான். இதை எதிர்த்துப் பேசுகின்றவர்கள் சமுதாயத்திற்கு தீங்கு செய்கின்றவர்கள் ஆவார்கள் என்பதைக் கூறி என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

* **Sri K. R. NALLASIVAM:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மனிதனுடைய சொத்துக்கு வரம்பு நிர்ணயிக்கின்றபோது ஆண்ட வனுக்கும் வரம்பு தேவைதான். இதை சாதாரண அறிவுள்ள யாரும் மறுக்க மாட்டார்கள் இதில் மத நம்பிக்கையைப்பார்த்து. பெருமைப் படுகின்றவர்கள் யாரும் இருக்க முடியாது. மத நம்பிகையுள்ளவர்கள் யாரும் வாழ வேண்டாம் என்று சோல்லவில்லை, அவர்கள் நன்றாக வ ழட்டும். யாரும் அதற்கு முட்டுக்கட்டை போடவில்லை, ஆனால் நிலத்தை வைத்துக்கொண்டுதான் மதத்தை வளர்க்க வேண்டும் என்று நினைப்பது தவறு.இதில் எந்த அரசியல் வாதிக்கும் கருத்து வேற்றுமை இருக்காது இந்த மசோதாவில் முன்னால் தஸ்திக் அலவன்ஸ் கொடுக் கலாம் என்று சொல்லப்பட்டிருந்தது. இதைப்பற்றி பலர் சொல்லுவது, வேதாந்திகளைப்போல் சொல்லுகிறார்கள் இன்றைக்கு இருக்கின்ற அரசாங்கம் வேண்டுமென்றால் கொடுக்கலாம், நாளைக்கு நாத்தீ கத்தில் நம்பிக்கை கொன்டுள்ள அரசாங்கம் வந்தால் அதை எப்படி கொடுக்கப்போகிறது என்று சந்தேகப்படுகிறார்கள். ஆனால் நாளைக்கு வரக்கூடிய அரசாங்கம் கோவில்களை இந்த நாட்டில் இருக்க வேண்டாம் என்று நினைத்து இடித்துவிட முடிவு செய்துவிட்டால் யார்தான் அந்த முடிவை என்ன செய்ய முடியும், நாளைக்கு பெருவாரி யாக இருக்கின்றவர்கள் சேர்ந்து இவ்விதம் கோவில்களை இருக்கவேண்டிய தேவையில்லை என்று முடிவு செய்துவிட்டால், இன்றைக்கு கைதூக்கு கின்றவர்கள் யாரும் எதுவும் செய்யமுடியாது. அது வேறு விஷயம் ஆகவே இதில் யாருடைய மத உணர்ச்சியையும் புண்படுத்தவேண்டும் என்ற நோக்கம் யாருக்கும் கிடையாது. மடங்களுக்கும் கோவில்களுக்கும் நிலங்கள் இருக்க வேண்டுமா என்பதுதான் பேச்சே தவிர, அவர்களுக்கு மத நம்பிக்கை இருக்கிறதா என்பதல்ல. அவர்களுக்கு விகிதாச்சாரப்படி தொகை கொடுக்க வேண்டும் என்று சொல்லும்போது அதைப்பற்றி யாரும் பிரமாதமாக ஆட்சேபணை செய்யவில்லை. உண்மையாகவே நிலம்

உழுபவர்களுக்கு கிடைக்கின்றதா என்பதைப் பார்த்து இந்தப் பிரச்னையைப் பற்றி பேசவேண்டும். அதை விட்டு விட்டு வேதாந்திகள் மாதிரி பேசுவது சரியல்ல. பெரிய வேதாந்தி என்று நாம் அத்தனைபேரும் கருதக்கூடிய காந்தியடிகள் யாரைக் கடவுள் என்று சொன்னார், வெறும் கல்லையும் திருவாடுதுறை மடத்தையுமா சொன்னார். சத்தியத்தைத்தான் கடவுள் என்று சொன்னார். அவர் காணுகின்ற சத்தியத்தை நிலைநாட்டுவதற்கு நிச்சயமாக நாம் நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்காக இந்த இரண்டாவது பிரிவு ரத்து செய்யப்பட வேண்டும். விவசாயிகளுக்கு கையில் நிலம் போய் சேருகின்றதா இதன் மூலமாக என்பதை நாம் சிந்தித்துப்பார்க்கவேண்டும். முன்புள்ள ஒரு பாட்டு நினைவுக்கு வருகிறது அதாவது, "கதிரொழ முருமே ஏறின், கட்டு முக்கலமே காணும்" என்ற நந்தநாரின் பாட்டுத்தான் நினைவுக்கு வருகிறது. இப்படியாக விவசாயம் நம்முடைய நாட்டிலிருக்கின்ற மடாதிபதிகளால் உற்பத்தி செய்யப்படுகிறதா? சராசரி தனி மனிதர் ஒருவர் ஒரு ஏக்கரிலிருந்து எவ்வளவு விளைவு எடுக்க முடியுமோ அதன் நாலில் ஒரு பங்கைகூட இந்த பாவி மக்கள் உற்பத்தி செய்வது கிடையாது. இதை ஞாபகத்தில் வைத்து யார் பேரிலும் தயவு தாட்சனியம் இல்லாமல் இந்த இரண்டாவது பிரிவை ரத்து செய்துவிட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிலும் முக்கியமாக மனிதன் வைத்திருக்கக்கூடிய சொத்துக்களுக்கு வரம்பு கொண்டுவரும்போது, ஆண்டவன் நிலத்திற்கு நிச்சயமாக உச்சவரம்பு தேவை என்று கூறி என் வார்த்தைகளை முடித்துக்கொள்கிறேன்.

Sri T. KARIA GOUNDER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த இரண்டாவது பிரிவைப்பற்றி இங்கு காரசாரமாக விவாதம் நடந்துகொண்டிருக்கிறது. எங்கள் ஊரில் இருக்கின்ற சாமிக்கு நிலமே கிடையாது. தஞ்சாவூரில் மட்டும் சில மடங்களுக்கும் மடாதிபதிகளுக்கும் சொத்து இருக்கிறது. இதற்காக இவ்வளவு தூரம் பேசவேண்டுமா என்பதுதான் என் அபிப்பிராயம். சொத்து இல்லையே என்று எந்த ஆண்டவனும் கவலைப்பட போவதில்லை. மடாதிபதிகளுக்கும் கோவில்களுக்கும் இருக்கின்ற சொத்துக்களுக்கு விதிவிலக்கு வேண்டும் என்று சட்டத்தில் சொல்லியிருக்கிறார்கள் என்றால், பொறுக்கு கமிட்டியார் எல்லா ஜில்லாக்களுக்கும் போய் இவற்றைப்பற்றி நன்கு விசாரணை செய்துதான் இந்த முடிவை எடுத்திருக்கிறார்கள். இந்தக் கமிட்டியில் இதைப்பற்றி பேசிய பல நண்பர்களும் இருந்திருப்பார்கள் என்று நம்புகிறேன். மேலும் சிலர், மனிதர்களுக்கு உச்சவரம்பு இருக்கும்போது என் ஆண்டவனுக்கு உச்சவரம்பு இருக்கக்கூடாது என்று கேட்டார்கள். மனிதர்களுக்கு இம்மாதிரியான உச்சவரம்பு எல்லாம் வந்தும் கூட, இன்று காலையில் பார்த்தேன். சர்க்காரை கவிழ்க்கவேண்டும் என்ற எண்ணத்துடன் போலீசாரின் உத்தரவையும் மீறி 4,000 பேர்கள் கைது செய்திருப்பதாகப் பார்த்தேன். இவை எல்லாம் எந்த வரம்புக்குட்பட்டது என்பதை நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். 30 ஏக்கர் வைத்திருப்பது கூடுதல், அதை குறைக்க வேண்டும் என்று சொல்லுகின்றவர்கள், சென்னை நகரத்தில் 1,000 வீடுகளை வைத்திருக்கின்றவர்களைப் பற்றி நினைப்பதில்லை.

Sri M. P. SUBRAMANIAM : The hon. Member is not talking on the relevant clause now.

DEPUTY SPEAKER : He will come to the point now.

Sri T. KARIA GOUNDER : எங்களுக்கு குறைவாக இருந்துவிட்டால் எல்லாம் சரியாகப் போய்விடும் என்று எண்ணுகிறார்கள். தமிழ் நாட்டிலேயே 2 கோடி 75 லட்சம் ஏக்கர் நிலங்கள் இருக்கின்றன. இதை மூன்றேகால் கோடி மக்களுக்கு எப்படி பிரித்துக் கொடுப்பது என்பதைப் பற்றி சிந்தித்துப் பார்க்க வேண்டும். அறநிலைய பாதுகாப்புச் சட்டம் கொண்டுவந்த போதும், ஆண்டவனின் தலையில் கையை வைத்துவிட்டார்கள் என்று ஒரு கூக்குரல் எழுந்தது எல்லோருக்கும் நினைவு இருக்கும். இன்று அந்தச் சட்டத்தை நல்ல முறையில் அரசாங்கம் நடத்தி வருகிறது. அதோடு ஒரு அமைச்சர் அதற்கென்று பொறுப்பும் ஏற்றுக்கொண்டிருக்

கிறார்கள். இதில் ஏதாவது ஊழல்கள் நடக்குமானால் அதைத் தடுப்பதற்கு வேண்டிய அதிகாரம் இந்தச் சட்டத்தில் இருக்கிறது. மத்திய சர்க்கார் குடியரசு சட்டத்திலேயே இதற்கு விதிவிலக்கு கொடுத்திருக்கிறார்கள் என்றால் இதற்குக் காரணம் இருக்கிறது என்பதை நாம் புரிந்துகொள்ள வேண்டும். தஞ்சாவூரை மட்டும் நாம் எடுத்துப் பேசுகின்றோம். அங்கு சமீபத்தில் இன்னும் கூடுதலாக 10 இஞ்சு மழை பெய்திருக்குமானால் இந்த நிலைமையே ஏற்பட்டிருக்காது. மற்ற ஊர்களில் எல்லாம் இந்த அளவுக்கு ஆண்டவன் இல்லை. ஆகவே இதில் இவ்வளவு தூரம் அவசரப்படவேண்டிய தேவையில்லை. மற்ற மதங்களை எடுத்துக்கொள்ளுங்கள், முஸ்லீம் மதத்தை எடுத்துக்கொண்டாலும் சரி, கிருஸ்தவ மதத்தை எடுத்துக்கொண்டாலும் சரி, அவர்களுக்கு எல்லாம் தங்கள் சொத்துக்களை பாதுகாத்துக்கொள்வதற்கு கமிட்டி இருக்கிறது என்று நினைக்கிறேன். இப்படியிருக்கும்போது இந்து மதத்தை மட்டும் எடுத்துக்கொண்டு அதன்பேரில் நம்பிக்கையில்லாதவர்கள், இதைப்பற்றி ரசாபாசமாகப் பேசுவதைப் பார்த்து, இந்துக்கள் என்று சொல்லிக்கொள்பவர்கள் வருந்தவேண்டியதாக இருக்கிறது. ஆண்டவன் மீது நம்பிக்கை இல்லை என்று வரும்போது, கோவில்களை எல்லாம் இடித்துவிடலாம் என்று கூட சொன்னார்கள். இதைப்பற்றியெல்லாம் இப்போது சொல்ல வேண்டியது அவசியம்தானா என்பதை பார்க்க வேண்டும். இதைப் பற்றி மத்திய சர்க்கார் ஏதாவது முயற்சி செய்தால் அர்த்தமிருக்கிறது. அதை விட்டு விட்டு இங்கு வேகமாக பேசுவதில் எவ்விதமான பிரயோஜனமும் இல்லை என்பதுதான் என் அபிப்பிராயம் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது சகோதரி அனந்தநாயகி சொன்னமாதிரி, போய்ப் பார்க்கக்கூட முடியவில்லை, எத்தனை நேரம் நின்றாலும் பார்க்க முடியவில்லை திருப்பதியிலே, அங்கே கோடிக் கணக்கான ரூபாய் வருமானம் வருகிறது. அந்த வருமானத்தை வைத்துக்கொண்டு யூனிவர்ஸிட்டி நடத்துகிறார்கள். மக்களுக்கு வைத்திய உதவிகளெல்லாம் செய்கிறார்கள். அந்த முறையில் உங்கள் ஆலோசனைகள் ஏதாவது இருந்தால் சொல்லுவதை விட்டு விட்டு ஏதேதோ பேசுவது சரியல்ல. இன்னும் ஒன்று. ஒரு மடாதிபதி 12,000 ஏக்கர் வைத்திருந்தால் அந்தச் சொத்தை யாருக்குக் கொடுக்கிறது என்று சொல்லாமல் விட்டு விட்டார்கள் . . .

SRI N. K. PALANISAMI : இந்த சர்க்காரையே மடாதிபதிகளிடம் கொடுத்து விடலாமா ?

SRI T. KARIA GOUNDER : மடாதிபதிகள் மக்களுடைய ஆதரவைப் பெற்று வந்தால் அவர்கள் ஏன் ஆளக்கூடாது என்று உங்களைக் கேட்கிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member should address the Chair and not address the Member personally as " உங்களை ".

SRI T. KARIA GOUNDER : உங்கள் வழியாக அவர்களுக்குச் சொல்லுகிறேன். மடாதிபதிகள் ஏன் ஆளக்கூடாது என்று சபை மூலமாக நண்பருக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த நிலையில் அரசியல் சட்டத்தைத் திருத்த வேண்டிய அந்தக் காரியத்தை சர்க்கார் ஆலோசனை செய்ய அவர்களுக்கு விட்டு விடலாம். இந்த ஷரத்து அவசியம். ஆகையால் இந்தத் திருத்தத்தை கொண்டு வந்தவர் . . .

SRI M. KALYANASUNDARAM : அதைக்கூட அவர் பார்க்கவில்லை என்பது தெரிகிறது.

SRI T. KARIA GOUNDER : திருத்தம் வந்திருக்கிறது. ஆனால் திருத்தம் கொடுத்த அங்கத்தினர் வரவில்லை. ஆகையால் இந்தத் திருத்தத்தை வற்புறுத்தாமல் இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு முடித்துக் கொள்கிறேன்.

19th September 1961]

***SRI R. KRISHNASAMI NAIDU:** கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த நிலவுடைமைக்கு உச்ச வரம்பு கொண்டுவரும் இந்தச் சட்டத்தை சட்டசபையிலே விவாதிக்கப்படும் சமயத்தில், அற நிலையங்களுக்கு இருக்கக் கூடிய நிலங்களின் மீது இந்தச் சட்டத்தில் எந்தவிதமான பாதகமும் ஏற்படக்கூடாது. அதற்கு விதி விலக்கு அளிக்கவேண்டும் என்று செலெக்ட் கமிட்டி முடிவு செய்ததை மாற்றவேண்டுமென்று இப்போது இங்கே முயற்சிக்கப்படுகிறது. இது சம்பந்தமாக அங்கத்தினர்கள் இங்கே பேசும் போது அதிலுள்ள நியாயங்களைத் திட்டவட்டமாக எடுத்துக் கூறுவதைப் பற்றி யாரும் ஆட்சேபிக்கப் போவதில்லை. என்னுடைய கருத்தும் மடாதிபதிகள் என்ற பெயரால் ஆயிரக்கணக்கான எக்கர் நிலங்களை அவர்களேதான் வைத்திருக்கவேண்டும், அவர்களுடைய ஏகபோக உரிமையின் கீழ் இருக்க வேண்டும். இப்போதுள்ள இதேவகையில் தான் அந்த நிர்வாகம் நடைபெறவேண்டும் என்று கருதுபவன் நான் அல்ல. அரசாங்கம், கோவில்கள், மடங்கள் சம்பந்தப்பட்ட சொத்துக்கள் எவ்வாறு நல்ல முறையில் பரிபாலிக்கப்படவேண்டும் என்பது குறித்து ஒரு தனிச் சட்டம் கொண்டு வரவேண்டும் என்று கருத்துக் கொண்டிருப்பதாக இங்கு அறிவிக்கப் பட்டது. அந்த நிலையில் இவ்வளவு காரசாரமாக, உசிதமற்ற வகையில் இன்றைக்கு இந்தத் திருத்தத்தின் பேரில் இவ்வளவு விவாதம் வேண்டிய தில்லை என்று நான் கருதுகிறேன்.

மேலும் இதைப்பற்றிச் சொல்லும்போது அற நிலையங்களுக்கும், மடங்களுக்கும் அதிகப்படியான நிலங்கள் இருப்பதாக வெளியில் மேடைகளில் பிரசங்கள் செய்கிறார்களே அதேபோன்று சட்ட சபையிலும் மனம் போன போக்கில் கூறப்படுகிறது. முதலில் பேசிய அங்கத்தினர் கூறினார்கள். இதே சட்ட சபையில் இன்று காலையிலேயே கூறினார்கள், தஞ்சையிலுள்ள மடங்களுக்கு மட்டும் 3 லட்சம் எக்கர் நிலங்கள் இருக்கிறது என்று. அரசாங்கம் சில மாதங்களுக்கு முன்னால் வெளியிட்ட புள்ளி விவரங்களைப் பார்க்கும்போது தஞ்சை ஜில்லாவில் இருக்கக்கூடிய கோவில் கள் 61, மடங்கள் 3, இவைகளெல்லாம் சேர்த்து 200 ஸ்டாண்டர்ட் எக்கருக்கு மேல் இருக்கக்கூடியது 35,368 எக்கர்கள் இருக்கின்றன என்று அரசாங்கம் குறிப்பில் கூறப்படுகிறது. 35,000 எங்கே, 3 லட்சம் எங்கே? இப்படிக்கல்லாமல் வெளியில் பேசப்படும்போதும் விவரங்களைச் சரியாகத் தெரிந்துகொண்டு பேசினால்தான் பொது மக்களுடைய ஆதரவும், பொது மக்களுடைய சரியான தீர்ப்பும் கிடைக்கும். பொது மக்களுடைய எண்ணங்களைத் தெரிந்துகொள்ள உண்மையை உள்ளபடி உரைக்க வேண்டும். இலட்சக்கணக்கான, கோடிக்கணக்கான எக்கர் நிலங்கள் இருக்கின்றன என்றால் கோடிக்கணக்கான எக்கர் அல்லது 3 லட்சம் எக்கர் அறநிலையங்களுக்கு எதற்கு என்ற எண்ணம் ஏழைகளுக்கு ஏற்படுகிறது. அவைகளைப் பொதுமக்களுடைய கையில் கொடுத்தால் என்ன என்ற எண்ணம் ஏற்படுகிறது, நிலம் இல்லாதவர்களுக்கு. உண்மைக்கு மாறாக பிரசாரத்தை எப்போதும் செய்துகொண்டு வந்தால் எப்படி பொது மக்கள் உண்மையை தெரிந்துகொண்டு ஒரு முடிவுக்கு வர சாத்தியமாக இருக்கும் என்று யோசித்துப் பார்க்கவேண்டும். இப்போது இன்றைய தினம் பேசும்போது கூட மற்றொரு நண்பர் கூறினார், சில இடங்களில் இவ்வாறு நடைபெற்றன என்று. அந்த நண்பரே இதே சட்ட சபையில் வேறு சில கேள்விகள் கேட்டு அரசாங்கம் அளித்த பதிலில் தேரிவித்த விவரங்களைப் பார்த்தால் அவர்கள் கூறும் உண்மைகள், புள்ளிவிவரங்கள் எவ்வளவு தூரம் நம்பக் கூடியதாக இருக்கும் என்பது சந்தேகமாக இருக்கிறது. சமய சந்தர்ப்பம் போல தங்களுடைய விவாதத்திற்கு அநுகூலமாக புள்ளி விவரங்களைச் சொன்னால் பொருத்தமாக இருக்காது. உண்மைக்கு மாறான கருத்தை சட்டத்தில் புகுத்தும் சந்தர்ப்பம் இதன் மூலம் ஏற்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

மொத்தத்தில் பார்த்தால் மொத்தம் 8 ஜில்லாக்களில் இந்த 200 ஸ்டாண்டர்ட் எக்கருக்கு அதிகமாக இருக்கும் ஸ்தாபனங்கள் மொத்தம் 86 இருப்பதாகவும், மொத்த நிலம் 46,547 எக்கர் இருப்பதாக

தெரிகிறது. இது மொத்தமாகப் பார்க்கும்போது, எல்லா ஜில்லாக்களிலும். ஆகவே உண்மைக்கு மாறுபட்டு, ஏதோ ஒன்று இருப்பதாக வைத்துக்கொண்டு, அதிகமாக நிலம் இருக்கிறது என்று வைத்துக் கொண்டு விவாதத்தில் இறங்குவது பொருத்தமாக ஆகாது.

இன்னும் மடங்கள், மற்றும் சமய ஆசாரம் சம்பந்தப்பட்ட கோவில்கள் இவைகளைப்பற்றி அங்கு நடைபெறும் ஊழல்களைப் பற்றி இங்கு விவரமாகப் பரிசீலனையில் இறங்க ஆரம்பித்து விட்டார்கள். குறைகள் இருக்கலாம். எனக்கும் இதைப்பற்றி மனக்குறை உண்டு. நானும் வருந்துகிறேன். அதற்காக அற நிலையங்கள் சம்பந்தப்பட்ட மட்டில் இவைகள் பரிபாலிக்கப்படும் வகையிலும் அற நிலையங்கள் எந்த நல்ல நோக்கத்தோடு ஏற்படுத்தப்பட்டனவோ அப்படிப்பட்ட காரியங்களுக்கு உபயோகமாகச் செயல்படும் முறையில் இவைகளைப் பற்றி பரிசீலனை செய்து ஆவன செய்யவேண்டுமே தவிர, யாரோ சிலர் தப்பு செய்கிறார்கள் என்பதற்காக அவர்களைப் பற்றி இங்கே கூறும்போது தர்ம ஸ்தாபனத்தையும், எந்த நோக்கத்தோடு ஏற்படுத்தப்பட்டதோ அந்த புனிதத் தன்மையையும் பாழ்படுத்தும் முறையில் விவாதம் இருப்பதால் அத்தகைய பேச்சுக்களை இங்குவைத்துக்கொள்வது உசிதமல்ல. ஒவ்வொருவரும் பிறரை மதிப்பிடும்போது தன்னை உறைகல்லாக எண்ணிக்கொண்டு, தான் தான் பத்தரை மாத்துத் தங்கம் என்று நினைத்துக்கொண்டு மற்றவர்களைப் பற்றி மதிப்பிடுவது வழக்கமாக இருக்கிறது. பிறர் மீது என்ன குற்றங்கள் காண்கிறோமோ அதேபோல நம்முடைய குறைகள் என்ன, நம்முடைய மனப்பாங்கு என்ன, எந்தெந்த வகையில் எண்ணங்கள் வேலை செய்துகொண்டு வருகிறன்றன, உள்ளத்தில் இருக்கும் சிற்றுணர்ச்சிகள் எப்படி இருக்கின்றது, அதன் காரணமாக நாம் எவ்வாறு செயல்பட்டு வந்திருக்கிறோம் என்று ஞாபகத்திற்குக் கொண்டு வந்து அவர்களை நம்முடன் ஒப்பிட்டுப் பார்த்து விவாதத்தில் இறங்கினால் பொருத்தமாக இருக்கும். ஆனால் நான் ஒன்று சொல்லுகிறேன். இப்போது இருக்கும் நிலையில் கோவில்களுக்கு இருக்கக்கூடிய சொத்து, மடங்களுக்கு இருக்கக்கூடிய சொத்து பொதுமக்களுக்கு எந்தெந்த வகையில் பொருளாதாரத் துறையில் உபயோகப்படும், ஏழை மக்களுக்கு வாழ்வளிக்கும் வகையிலும், அவர்கள் முன்னேற உதவக்கூடிய முறையிலும் இருக்கவேண்டும் என்பதை ஒத்துக்கொள்கிறேன். இப்போது அதற்குள்ள பல இடஞ்சல்களை அகற்றப் பாடுபடவேண்டும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அப்படிப்பட்ட சட்டத்தை எதிர்காலத்தில் அரசாங்கம் செய்யக் காத்திருக்கிறது. அந்த சந்தர்ப்பத்தில் அரசியல் சாசனத்தில் ஏதேனும் பாதகமாக இருந்தாலும் அதையும் திருத்துவதற்கு வேண்டிய முயற்சி செய்யப்படவேண்டும். இதற்கும் நாம் கொஞ்சம் காத்திருக்கவேண்டும். எத்தனையோ நல்ல மாறுதல்களை கடந்த சில வருடங்களில் செய்திருக்கிறோம்; முயற்சிகள் எடுக்கப்பட்டு வந்துள்ளது; எத்தனையோ காரியங்களை சட்டபூர்வமாகச் செய்து வந்திருக்கிறார்கள்.

11.00 a.m. இந்தச் சீர்திருத்தத்தையும் கூட எந்த அளவுக்கு பொதுமக்களுடைய மனதுக்கு ஒத்துப் போகக்கூடிய வகையில், அவர்கள் மனம் பரிபக்குவம் அடைவதற்குத் தகுந்தபடி, அந்தந்தக் காலத்திலே உள்ளதை அனுசரித்து, இதிலுள்ள ஊழல்களையும், கஷ்டங்களையும் அகற்றி நன்மை பயக்கக்கூடிய அளவிலே காரியங்கள் செய்யும்வரையில் நாம் பொறுத்திருக்கவேண்டும். அப்போது தான் செய்ய வேண்டும். அது தான் நல்லது. எதிர்கால சந்ததிகளின் நலனைக் கருதாமல், இப்போதே அப்படிச் செய்யவேண்டும், இப்படிச் செய்யவேண்டும் என்று சொல்வது, இன்றையத் தினம் உள்ளதை மனதிலே கற்பனை செய்துகொண்டு சொல்வது எதிர்கால சந்ததிகளுக்கும், இன்றிருக்கக்கூடிய நிலைமைக்கும் பொருத்தமாக இருக்காது என்பதை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

அதுமட்டுமல்ல. இப்போது பெரிய மடாதிபதிகள் தவிர, கோயில்களிலேகூட நிலங்களை குத்தகைக்கும், வாரத்திற்கும் விட்டிருக்கிறார்கள். அல்லது கூட்டுறவு ஸ்தாபனங்காளாக அமைத்து, அல்ல கூட்டுறவு

19th September 1961] [Sri R. Krishnasami Naidu]

பண்ணைகளாக அமைத்து, அப்படிக் கொடுக்கப்படுகின்ற ஸ்தாபனத்தின் நிர்வாகிகளாக, டிரஸ்டிகளாக இருப்பவர்கள், சிற்சில சமயங்களிலே ஏழை மக்கள் குத்தகைக்கோ அல்லது வாரத்திற்கோ நிலத்தை எடுத்துக்கொண்டு, சாகுபடி செய்து வந்த முறையிலே அவர்கள் உண்மையிலேயே நஷ்டப்பட்டு, குத்தகைத் தொகையைக்கூட கட்டுவதற்கு எவ்வித சொத்தும் இல்லாத நிலைமை ஏற்படும்போது ஒப்பந்தப்படி அவர்கள் குத்தகைக்கு ஒப்புக்கொண்டு எழுதிக் கொடுத்திருந்தாலும், அவர்களுக்கு விலக்கு அளிக்கவேண்டும். அப்படிப்பட்டவர்கள் மீது கோர்ட் மூலம் நடவடிக்கை எடுக்கப்பட்டு மேலும் நிர்ப்பந்திக்கப்பட்டு, அவர்கள் வாழ்க்கையே அழிந்து விடக்கூடிய முறையிலே, அத்தகைய முயற்சிகளிலே இறங்கிவிடக் கூடாது. அந்தச் சந்தர்ப்பங்களிலே மேலே உள்ள கமிஷனர், ஏன் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குகூட கொண்டுவந்து, அத்தகையவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கும் வகையில் உதவ கோயில்கள் நிர்வாகம் முன்வரவேண்டும். அதற்கான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும் என்று நான் கருதுகிறேன். கோவில் மடங்களின் நிர்வாகங்களுக்கென இச்சந்தர்ப்பத்திலே இதற்கென்று உடனடியாக இப்போதே ஒரு சட்டம் கொண்டுவர வேண்டும், அல்லது அந்தவகையில் இச்சட்டத்தை திருத்தவேண்டுமென்று சொல்லும்போது நிர்வாகத்திலேயும், சமுதாயத்திலேயும் எத்தகைய சூழ்நிலையை உண்டுபண்ணும் என்பதையும் கருத்தில் கொள்ளவேண்டும். ஆகவே இதற்கான ஒரு சட்டத்தை கொண்டு வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டு வருகிறோம் என்று சொல்லும்போது, அற்நிலையங்களுக்கு விதிவிலக்கு அளிக்கும் வகையில் ஷரத்தை நீக்க வேண்டி இப்போது திருத்தம் கொண்டுவந்து வற்புறுத்தக் கூடாது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

* **Sri T. R. RAMAMIRTHA THONDAMAN :** கனம் உதவிசபாநாயகர் அவர்களே, இந்த மன்றத்தில் மடம், கோவில், தேவஸ்தான தர்ம ஸ்தாபனமான இந்த தர்மஸ்தாபனம், மடம், கோயில் ஆகியவற்றின் நிலங்கள் மீது உச்ச வரம்பு விதிப்பது பற்றி எனக்கு முன்னால் நாயுடு அவர்கள் கூட பேசினார்கள். நீண்ட காலமாகவே இந்த கோயில், மடங்கள் எல்லாம் இந்த நாட்டிலே எந்த முறையில் நடந்துகொண்டு வந்திருக்கின்ற என்பதைப்பற்றியெல்லாம் இந்த மன்றத்தில் பல தடவைகள் முன்னரே தெரிவித்திருக்கிறேன். மடம், கோயில்களுக்கு விதிவிலக்கு அளிப்பது என்பது ஆண்டவனைக் காப்பாற்ற வேண்டும், கடவுளைக் காப்பாற்ற வேண்டும் என்று ஒரு சில கூட்டம் கூக்குரல் இட்டுவருகிறது. ஒரு சிலர் கடவுள் மதம் என்று சொல்லி சுகபோகமாக வாழ்வதற்கும், பிற ஹரிஜனங்களான, பெரும்பகுதி மக்களை இழிவுபடுத்தவும் அரண், மதம், ஜாதி, கடவுள் என்று ஏற்படுத்திக்கொண்டு வாழ்ந்து வருகிறது என்பது தெளிவானமுறையில் மக்கள் உணர்ந்து விட்டார்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் 100-க்கு 80 சத விகிதம் உள்ள—ஏழை உழவர்கள் தின கூலி வேலை செய்பவர்கள் என்ற பேரால் இருக்கும் ஹரிஜனங்கள் பிற்பட்டவர்கள் வாழ்கின்ற இந்தப் பகுதிகளிலே கோயில்களாலும், மடங்களாலும், தேவஸ்தான இடைத்தனகதாரராலும் அந்தக் கோயில்களுக்கு உள்ள நிலத்தாலும் எந்த அளவுக்கு பயனடைந்து இருக்கின்றனர் என்று பார்த்தால், ஒருவித நலனையும் காணமல் மதம் மாற்றப்பட்டும், சுரண்டப்பட்டும் அடிமைகளாக இழிவான நிலையில் கஷ்டப்பட்டுக்கொண்டு வாழ்க்கை நடத்திவருவதையே காண்கிறோம். அதே சமயத்தில் கடவுளின் பேராலும் மதத்தின் பேராலும் ஒரு சிலர் தங்களுடைய வாழ்க்கையை சுகபோகமாகவும், இன்னும் சில தவறான வழிகளிலும் நடத்துவதற்காகவே கடவுள் மதம் இது போன்ற மட தேவஸ்தானங்கள் என்று இந்த அமைப்புக்களை ஏற்படுத்திக்கொண்டிருப்பதைத் தவிர அவைகள் மக்களை காப்பாற்றுவதற்காக ஏற்பட்டது அல்ல. மடங்கள், கோயில்கள், தர்ம ஸ்தாபனங்கள் பற்றியெல்லாம் சொன்னார்கள். அவைகள் அனைத்தும் எங்கிருந்து வந்தன என்று பார்த்தால் அப்பொழுதிருந்த தியாக புருஷர்கள் தியாகத்தை உணர்ந்து கொடுக்கப்பட்ட தர்மங்கள் இப்போது

[Sri T. R. Ramamirtha Thondaman] [19th September 1961

திருப்பனந்தாள் மடத்தை எடுத்துக்கொண்டால் அது நல்ல முறையில் நடக்கலாம். காரணம் ஆதியிலே அந்த மடம் தர்மத்தையோ, அல்லது கோயில்களையோ தனியாக ஏற்படுத்திக்கொண்டு வரவில்லை. ஆதி குமர குருபரர் ஸ்ரீ வைகுண்டத்தில் ஊமையாகப் பிறந்து, மீனாட்சியம்மை அவர்களால் வாய் திறக்கப்பட்டு காசியில் அன்றிருந்த முஸ்லிம் மன்னரின் மனதை மாற்றி, காசியில் அவர் 64 சத்திரங்களைக் கட்டி, அந்த தர்மசத்திரத்திற்கென தஞ்சை ஜில்லாவில் நிலம் பெறப்பட்டன. அதன் மூலம் இந்த தர்மஸ்தாபனம் வளர்ந்தது என்பதைப் பார்க்கிறோம். அதேபோன்று மற்ற மடங்கள் திருவாடுதுறை தருமபுரம் இருக்கின்றன. அப்படி ஏற்பட்ட இந்த மடங்கள் சாதாரண மக்களை, உழவர்களை, உழுதுக் கொண்டு வருபவர்களை காப்பாற்றும்சக்தி உடையதாக இன்று விளங்குகிறதா என்று பார்த்தால் நிச்சயமாக இல்லை. அந்த மடங்களுக்கு கொடுக்கப்பட்ட தர்ம நிலத்தில் 6-ல் 1 கடமையாக இருந்திருக்கிறது. அத்தகைய மனப் பான்மை இருப்பதாகவே இல்லாத நிலைமையில்தான் இன்று மடங்கள், கோவில்கள், கடவுள்கள் எல்லாம் காட்சியளிக்கின்றன. ஆனால் அதே நேரத்தில் சில புல்லுருவிகள் அந்த இடத்தில் உட்கார்ந்துகொண்டு, கடவுள் பெயரைக்கொண்டு பல்தரப் பட்ட தீய காரியங்களை புரிந்து கொண்டு இருப்பதைத்தான் நாம் இன்றைக்குப் பார்க்கிறோம் என்பதை இந்த சபையின் கவனத்திற்குக் கொண்டுவர நான் ஆசைப்படுகிறேன்.

இவ்வாறு பல குறைபாடுகள் ஒவ்வொரு இடத்திலும் ஏற்பட்டுக்கொண்டு வருவது கனம் அமைச்சர் அவர்களுக்குக்கூட தெரியும். திருவாடு துறையைப்பற்றிச் சற்று சிந்தித்துப்புரிந்துகொள்ள வேண்டும். அதைப்பற்றி நான் இந்த மன்றத்திலும் அமைச்சரிடத்திலும் சொல்லியிருக்கிறேன். அதைப்பற்றி சற்று பரிசிலனை செய்துபார்க்கவேண்டுமென்று கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். இந்தத் துறையில் மடங்களும், கோயில்களும் எந்த நோக்கத்தோடு அந்த காலத்தில் செய்யப்பட்டனவோ அந்த வகையில் இந்தக் காலத்தில் செயல்படாமல் இருந்து வருவதைத் தான் இன்றைக்குப் பார்க்கிறோம். அந்தக் காலத்தில்கூட 6-ல் ஒரு பங்குதான் ராஜ பாகத்தை மட்டும்தான் மடம், தேவஸ்தானங்களுக்கு தர்மமாக கொடுக்கப்பட்டிருக் கிறது. ஆனால் கடவுள்களும் மடங்களும் உழவர்களுடைய உரிமை உழ வர்கள் உழவும் 5 பாகத்தையும் ஆக்ரமித்திருக்கிறார்கள். இதுமாதிரி கடவுளுக்கு செலவு செய்யவேண்டுமென்று சொல்லவில்லை. ஆனால் இன்றைக்கோ கடவுள் பெயரைச் சொல்லிக்கொண்டு, உழவர்கள் உரிமை பூராவையும் மடத்திற்கே எல்லாச் சொத்துக்களும் சொந்தம் என்ற அடிப்படையில் ஆக்கிரமித்துக்கொண்டிருப்பதைத்தான் பார்க்கிறோம். அதே நேரத்தில் இந்த தர்ம ஸ்தாபனங்கள் உண்மையாக ஏழைகளுக்கோ, உழுகின்ற உழவர்களுக்கோ நன்மை செய்யாமல் அவர்களிடம் சுரண் டுவதையும் இந்து மதம் என்ற பேரால் 100-க்கு 80 சத விகிதத்தினரை இழிவாக நடத்துவதும் தொழிலாகக்கொண்டு, ஒருசில சிறு கூட்டம் மட்டும் தங்களுடைய சுகபோகங்களுக்காகவும், தவறான நடத்தைகளுக் காகவும் இந்து மதம், கடவுள், மடம், தேவஸ்தானம் என்ற அமைப்பை ஏற்படுத்திக்கொண்டு இருக்கின்ற காரணத்தினால், இந்த மதத்திலுள்ள பலர் மத மாற்றம் அடைந்து, இருக்கிறார்கள் என்பதை அந்தந்த தேவாலயங்களுக்கு அருகாமையிலேயே அவர்கள் இருந்துகொண்டு வரு வதைப் பார்க்கிறோம். ஆகவே இதற்கெல்லாம் காரணம் இந்த தேவா லயங்களின், மடாலயங்களின் கொடுமைதான் என்பது நிச்சயமாக விளங்கு கிறது. இதைப்போல் பல மடங்கள் இருக்கின்றன. சங்கராச்சாரியார் மடம் இருக்கிறது. ஜீயர் ஐயங்கார் மடம் இருக்கிறது. இன்னும் திருவாடு துறை, திருப்பனந்தாள், தர்மபுரம் போன்று பல சைவ மடங்கள் இருக் கின்றன. அவைகளையெல்லாம் பார்த்தால், அவர்களுக்குள் வேறுபட்ட கருத்தையும், மாறுபாடுபட்ட கருத்துக்களையும் காணமுடிகிறது. ஆனால் அவைகள் அய்யர் அய்யங்கார் முற்போக்கு சைவர்களான ஒரு சிறு கூட்டம் வாழ்வதற்காக அமைக்கப்பட்ட அமைப்பைப் போல முறைகளை வகுத்துக்கொண்டு செயல்பட்டு வருவதைத்தவிர பெரும்பான்மையான பிற்பட்ட வர்க்கத்தினர் ஹரிஜனங்கள்தான் இந்து என்ற பேரால் உள்ள

19th September 1961] [Sri T. R. Ramamirtha Thondaman]

இவர்கட்கு பயன் இல்லை. தர்மம் என்றால் கடவுள் என்கிறார்கள். இப்படி கடவுள் என்று சொல்லிக்கொண்டு, கடவுள் பெயரால் ஒவ்வொரு கடவுளிடத்திலும், மடங்களிலும் இருக்கும் உழவர்களை அடித்த சாட்டைகளை பார்க்கலாம். உழுகின்ற உழவனை அடிமைப்படுத்தி, அவர்களை அந்த சாட்டைகளால் அடிக்கக் கூடிய நிலைமையைத்தான் உண்டு பண்ணி இருக்கிறார்கள் என்று எண்ண வேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. கடவுள், மதம் தர்மம் என்ற பெயரால் மேலும் இந்த மடாலயங்களுக்கும் கோயில்களுக்கும் பல மானியங்கள் பழைய காலத்தில் விடப்பட்டிருக்கிறது. குறிப்பாக தொண்டைமான் சேரி, தொண்டைமான் நத்தம், தொண்டைமான் கள்ளி, தொண்டைமான் களம் என்ற காரணப் பெயர்களோடு பல இடங்களை மேற்படி மடாலய நிர்வாகத்தின் கீழ் காண்கிறோம். ஆனால் மேற்படி மானியம் அளித்தவர்களின் மரபுகளான என் போன்றவர் கூட பிற்பட்டவர்களுக்கும், ஹரிஜனங்களுக்கும் இழிவான நிலைதான் இருக்கிறது என்று பார்த்தால் வருத்தப்பட வேண்டிய நிலைமையில்தான் இருக்கிறது. தொண்டைமான் இழிவான நிலையில்தான் இருக்கிறது. ஆகவே இந்த மாதிரியான அமைப்பில் இருக்கக்கூடிய நிலங்களையெல்லாம், நிலங்கள் பூராவையும் சர்க்காரே நேரடியாக எடுத்துக்கொண்டு, கூட்டுறவு சாகுபடிக்கு கொண்டு வரவேண்டும். கூட்டுறவு பண்ணைகளாக அமைத்து, உழைக்கின்ற, உழுகின்ற உழவனுக்கே அந்த நிலங்கள் அனைத்தும் பயன்படும் வகையில், கூட்டுறவு சாகுபடி முறையில் தர்ம ஸ்தாபனங்களிடமிருந்து நிலங்களை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும், அப்படி எடுத்துக்கொள்ளும் நிலங்களை உழவர்களுக்கு விநியோகிப்பதற்கும் இப்பொழுதிருக்கும் மடம், கோயில், தர்ம ஸ்தாபனங்களுக்கும் நிலத்திற்கும் எவ்வித மானியமில்லாத நிலையில் ஒரு சட்டம் இந்த சர்க்கார் கொண்டு வரவேண்டுமென்றும், அதுமாதிரி சட்டம் இந்த கூட்டத்திலேயே வரவேண்டும் என்று மன்றாடி கேட்டுக் கொண்டு முடிக்கிறேன். வணக்கம்.

*SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டவேண்டுமென்று அடிப்படையில் வருகின்ற இந்தச் சட்டத்தில் கூறப்பட்டுள்ள விதிவிலக்குகள் அளிப்பது பற்றி இந்தச் சட்டமன்றத்திலே உள்ள உறுப்பினர்கள் பலரும் தங்களுடைய கருத்துக்களை எடுத்துக் கூறி இருக்கிறார்கள். உண்மையாகவே உச்ச வரம்பு நாட்டிலே கொண்டு வரப்படவேண்டுமென்ற கருத்து ஏற்பட்டு ஏறத்தாழ 10 ஆண்டு காலம் ஆகிறது. உச்ச வரம்புச் சட்டத்தை நிறைவேற்றப்போகிறோம் என்று அறிவித்து ஏறத்தாழ 6 ஆண்டுக் காலம் ஆகிறது. அதன்பின் சட்டமன்றத்தில் உச்ச வரம்புச் சட்டத்தைக் கொண்டு வந்து ஒரு ஆண்டுக் காலத்திற்குமேல் ஆகப் போகிறது. ஆனால் இந்த உச்ச வரம்பிலிருந்து தப்பிக்கொண்டவர்கள் பல வகையினர். ஆகையினால் மிச்ச நிலங்கள் கிடைக்கப் போவது மிகவும் குறைவாக இருக்கும் என்பதை அப்போதே பலர் இந்த அரசாங்கத்திற்குத் தெளிவாகத் தெரிவித்தோம்.

(Sri N. K. Palanisami in the chair.)

அப்படி குறைவான நிலங்கள்தான் கிடைக்குமென்பது தெரிந்திருந்தும், சமயத் தலைவர்கள், மடத்துத்தலைவர்கள் இந்த உச்சவரம்பிலிருந்து தம்பித்துக்கொண்டு, விதிவிலக்குப் பெற்றுவிடக்கூடிய ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தி இருப்பதும், அரசியல் சட்டத்தில் அதற்கு இடமில்லாத காரணத்தினால்தான் விதிவிலக்கு அளித்திருக்கிறோம் என்று அமைச்சர்கள் கூறுவதும் இந்த நாட்டு மக்களுக்கு அவர்கள் செய்திருக்கக்கூடிய ஒரு துரோகமுமாகும். நான் ஏன் இதைத் துரோகம் என்று குறிப்பிடுகிறேன் என்றால், நீண்டகாலமாக இந்த நாட்டிலே உள்ள மக்களிடம், " நில உச்ச வரம்புச் சட்டம் வரப் போகிறது, அப்படி உச்ச வரம்புச் சட்டம் வருகிற காலத்தில், மடாலயங்களின் நிலங்கள், தேவஸ்தானங்களின் நிலங்கள் அந்த ஏழை மக்களுக்கு கிடைக்கும் " என்று கூறி அவர்களை நம்பவைத்திருக்

இேரம். பாடுபடுகின்றவர்களுக்கு நிலங்கள் சொந்தமாகப் போகிறது என்று ஆட்சியாளரால் சொல்லப்பட்டதையும் நாம் கேட்டு வந்திருக்கிறோம். மாய வரம் நண்பர் திரு. நாராயணசாமி நாயுடு அவர்கள், உழுகின்றவனுக்கே நிலம் சொந்தமாகப் போகிறது என்பதை மக்களிடத்திலே திரும்பத் திரும்பச் சொல்லி இருக்கிறார்கள். அதேபோல் திரு. தொண்டைமான் அவர்கள் இங்கு பேசுகிறபோது வெளியிட்ட எண்ணத்தைதான் அந்த வட்டாரத்து மக்களிடத்திலே பலதடவையும் எடுத்துச் சொல்லியிருப் பார்கள். தேர்தலில் மக்களிடத்திலே ஓட்டு வாங்குகிறபோதும், மடால யத்து நிலங்களெல்லாம் உங்களுக்குச் சொந்தமாகப் போகிறது என்று தான் சொன்னார்கள். ஆனால், இன்றையதினம் ஆளும் கட்சியினர் எந்த மடத்திற்கு அடிமையானார்களோ எனக்குத் தெரியாது. எந்தச் சமயம் அவர்களை ஆட்கொண்டதோ நான் அறிய மாட்டேன். எந்த ஆண்டவன் அவர்கள் கனவில் தோன்றி "ஐயா எங்கள் பக்தர்களுக்கு நிலம் வைக்காவிட்டால் நாம் உம்மை ஆட்சியில் விட்டுவைக்கமாட்டோம்" என்று சொன்னதோ அதுவும் எனக்குத் தெரியாது. அந்த நிலங் களுக்கு இப்பொழுது விதிவிலக்கு அளித்திருக்கிறார்கள். நான் கேட்க விரும்புவது என்னவென்றால், சட்டம் கொண்டுவருவது ஏமாந்தவர் கள் நிலங்களுக்கு மட்டும் உச்ச வரம்பு என்ற முறையிலா, அல்லது பொதுவாக எல்லா நிலங்களுக்கும் உச்ச வரம்பா என்று நான் அறிய விரும்புகிறேன். யாரோ, ஏமாளிகள், தவறி சிக்கிக்கொண்டவர்கள் இவர் களுடைய நிலத்திற்கு மட்டும்தான் உச்ச வரம்பா ? சட்டம் வரும் என்று எதிர்பார்த்து மாமனார் பெயருக்கோ, மாமியார் பெயருக்கோ மருமகன் பெயருக்கோ, அல்லது வேறு உற்றார் உறவினர் பெயருக்கோ, அல்லது சமையல்காரன் பெயருக்கோ, சந்தர்ப்பம் வந்தால் சமையல்காரி பெயருக்கோ எழுதிவைத்திருந்தால் அந்த நிலங்களுக்கு உச்ச வரம்பு இல்லையா ? என்று கேட்கிறேன்.

**Sri R. KRISHNASAMI NAIDU :** சமையல்காரி ஏழையாக இல்லையா ?

**Sri K. ANBAZHAGAN :** ஒரு சட்டமன்ற உறுப்பினர் சமையல்காரி ஏழையாக இருக்கக் கூடாது என்று தெரிவிக்கிறார். ஏழையாக இருப்பவர்களிடத்தில் அனுதாபம் கொண்டவன்தான் நான். நிலத்தில் உழுபவர்களுக்கு நிலம் என்று சொல்லிவிட்டு, வீட்டிலேயே வேலை செய்பவர்களுக்கு நிலம் கொடுப்பது, உழுபவர்களை, அந்த நிலத் தில் பாடுபடுகிறவர்களை ஏமாற்றுவதற்கு பயன்படுவதல்லவா ? யாரை ஏமாற்றுவதாக இருந்தாலும் அது வருந்தத்தக்கதுதான். ஏழைகளுக்கு நிலம் கிடைக்கவேண்டும் என்பது நியாயமாக இருந்தாலும் உழுகிற பாட்டாளி மக்களுக்கு நிலம் இல்லாமல் இருந்தால், அவர்களுக்கு நிலம் கிடைக்கவேண்டும் என்பது அதைவிட இன்றியமையாதது. உழுகிற மக் களுக்கு, கிடைக்கக் கூடிய நிலம் காணி நிலமாக இருந்தாலும், நந்தனார் காலத்திலிருந்து உழுகிற நிலமாக இருந்தாலும், வி. எம். பி. கெனால் வெட்டியபொழுது கிடைத்து உழுகிற நிலமாக இருந்தாலும், அந் நிலத்தில் உழுகிறவர்களுக்கு முதல் உரிமை அளிப்பதற்கு இன்றைய காங்கிரஸ் ஆட்சி தவறியிருக்கிறது. அப்படித் தவறியிருப்பதுமட்டுமன்றி விதிவிலக்கு யார் யாருக்கு அளிக்கலாம் என்று தேடித் தேடிப் பார்த்து ஒரு பெரிய விதி விலக்குப் பட்டியலே அளித்திருக்கிறார்கள்.

ஏறத்தாழ 35,000 எக்கர்கள் தஞ்சை மாவட்டத்தில் மட்டும் மடா திபதிகளுக்குச் சொந்தமான நிலங்கள் உள்ளன என்று காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த உறுப்பினர்களே தெரிவித்திருக்கிறார்கள். 35,000 ஏகரா சாதாரணமான நிலமா ? 35,000 ஏகரா அதில் பாடுபடும் ஏழைகளைக் காப்பாற்ற முடியாத நிலமா ? 35,000 ஏகராவில் 35,000 குடும்பங்கள் பிழைக்கமுடியாதா ? அந்தக் குடும்பங்கள் வாழ்வதைவிட, தனக் கென்று ஒரு துணை கூட இல்லாமல், கிடைத்த துணையைக்கொண்டு வாழ்வதற்கு வசதி பெற்றிருக்கிற மடாதிபதிகளுக்கு இவ்வளவு நிலங்கள்

19th September 1961] [Sri K. Anbazhagan]

சொந்தமாக இருக்கவேண்டுமா ? அருள் கூர்ந்து சிந்திக்கக் கேட்டுக்கொள்கிறேன். இதில் ஆண்டவனை இழுத்துப் பல நண்பர்கள் குழப்பிக்கொண்டிருக்கிறார்கள். ஆண்டவனுக்கு நிலம் கூடாதா என்று கேட்கிறார்கள். உலகமே ஆண்டவனுக்குச் சொந்தம். ஆண்டவனே ஒப்புக்கொண்டாலும், ஒப்புக்கொள்ளாவிட்டாலும், உலகிலுள்ள அத்தனை மக்களும் ஆண்டவனுக்குச் சொந்தம். உலகத்திலுள்ள எல்லாமே ஆண்டவனுக்குச் சொந்தம் என்று சொல்லிவிட்டு அவர் பெயரால் 1,000 காணி வைத்துக்கொள்ளுவது ஆண்டவனை ஏமாற்றுவதாகாதா ? " 1,000 ரூபாய் லாபம் வந்தால்—நான் நடத்துகிற கள்ள மார்க்கெட்டில் கொள்ளை லாபம் வந்தால்—ஆண்டவனுக்கு 8 அணுவுக்கு சூடம் ஏற்றுகிறேன்" என்று வேண்டிக்கொள்ளுகிற பேதமைக்கும், இதற்கும் வேறு பாடு என்ன ? ஆண்டவனுக்கு நிலமா தேவை ? ஆண்டவனுக்கு என்று ஒரு தனி அமைச்சரா தேவை ? ஆண்டவனைக் காப்பாற்றவேண்டுமென்ற நெருக்கடி நாட்டிலே ஏற்பட்டிருக்கிறதா ? ஆண்டவன் பிறர் தயவிலே வாழ்கிறாரா ? அப்படி பிறர் தயவிலே வாழ்ந்தால் அவன் ஆண்டவன் அல்லவே, மாண்டவனாயிற்றே. ஆண்டவனைக் காப்பாற்றுகிறோம் என்று சொல்வதை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. ஆண்டவனுக்கு நிலம் இருக்கக் கூடாதா என்று ஒரு அம்மையார் கேட்டார்கள்—தனி மனுதனுக்குத்தான் இருக்கக் கூடாது, ஆண்டவனுக்கு கூட இருக்கக்கூடாதா என்று கேட்டார்கள். ஆண்டவன்தான் பயிர்ச்செலவு நடத்துகிறாரா ? ஆண்டவன் கலப்பைப் பிடித்து காளை மாட்டைத் தட்டி ஓட்டுகிறாரா ? ஆண்டவன் பெயரால் யாரோ சில பேர் பிழைக்கிறார்கள், ஆண்டவன் பெயரால் பல பேர்கள் கொள்ளை அடிக்கிறார்கள். ஆண்டவன் பெயரால் கனமாக இருப்பவர்கள் பலர் சந்தர்ப்பம் கிடைத்தால் கடவுள் சொத்து அதிகாரத்தைக் கைப்பற்றுகிறார்கள். கடவுளின் பெயரால் சூது நடக்கக் கூடாது என்றுதான் சொல்லுகிறோம். கடவுள் நம்பிக்கை கூடாது என்று சொல்லவில்லை. பணக்காரர்களுக்கு மட்டுமா கடவுள் நம்பிக்கை ? பிரபுக்களுக்கு மட்டுமா கடவுள் நம்பிக்கை ? ஏழைகளுக்கு கடவுள் நம்பிக்கை கிடையாதா ? மடங்களுக்குப் பக்கத்திலேயே போகாதவர்களுக்கு கடவுள் பக்தி கிடையாதா ? சாதாரண மக்களுக்கும், கோவிலுக்கே போகாதவர்களுக்கும் கடவுள் பக்தி கிடையாதா ? கடவுள் பக்தி பொதுவானது, அதைக்காட்டி ஆண்டவனுக்குச் சொத்து வேண்டும், எனவே மடாதிபதிகளுக்கும், கோவில்களுக்கும் விதி விலக்கு அளிக்க வேண்டும் என்று பேசுகிறபோழுது நண்பர்கள், சட்டமன்ற உறுப்பினர்கள் ஆழ்ந்து சிந்தித்து முடிவு கட்டவேண்டும்.

இப்பொழுது நாம் கேட்பது அந்த நிலங்களுக்கும் உச்ச வரம்பு. இதனால் தரம் கெட்டுவிடுமா ? நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுவது அறத்திற்கு மாறான கருத்தா, அறத்திற்கு ஒவ்வாத காரியமா? கடவுளுக்கு அடுக்காத காரியமா ? கடவுளுக்கு அடுக்காத காரியம் என்றால் மற்றவர்களுக்கு அடுக்குமா ? கடவுளுக்கு ஒத்தது தான் மற்றவர்களுக்கும் ஒத்தது. அறம் பொதுவானது. அறத்திலே தர்மசாலைகளுக்கு ஒரு தனி அறம், மற்றவர்களுக்கு ஒரு தனி அறமா ? சில மடங்களில் கஞ்சா பயிரிட்டார்கள் என்றால், மடங்களில் பயிரிட்டதால் புண்ணிய பூமியில் பயிரிடப்பட்டது என்று போலீஸார் நடவடிக்கை எடுக்காமல் இருக்க முடியுமா ? சில மடங்களில் பெண்கள் கற்பழிக்கப்படுகிறார்கள் என்றால் சில போலீஸார்கள் நடவடிக்கை எடுப்பதற்கு அஞ்சினார்கள். எனில் அதனாலேயே அது தான் தருமநெறி அறம் என்று கருதமுடியுமா ? கடவுள் பக்தி என்ற பெயரால் ஊர் சொத்தை சுரண்டுகிற மடாதிபதிகளையும் நமக்குத் தெரியும். பெரிய மடாதிபதி, சிறிய மடாதிபதி என்றெல்லாம் வழக்கு இருக்கிறது கோர்ட்டில். சின்ன மடாதிபதி எப்படி எப்படி யோக்யதை தவறினார் என்று பெரிய மடாதிபதி எடுத்துச் சொல்லி, " இவர் அல்ல எனக்குத் தம்பிரான் இவர் வேண்டாம் ", என்று நீதி மன்றத்திலேயே மறுத்திருக்கிறார். நாட்டில் இருக்கிற நிலைமையை எண்ணிப் பார்க்கவேண்டும். மடங்கள் தான் அறத்தை வளர்க்க வேண்டும் என்ற கருத்தைச் சொன்னார்கள். மடங்கள் வளர்க்க

வேண்டிய அறத்தை இக்காலத்தில் மந்திரிகளும், மற்றவர்களும்கூட வளர்க்கவேண்டும். அப்படிப்பட்ட அறத்தை சட்டமன்றமும் வளர்க்க வேண்டும். அறத்தை மடங்கள் தான் வளர்க்கவேண்டுமென்று சொன்னாலும் அறநிலைய நிலத்தில் பாடுபடுகிற மக்கள் ஏமாற்றப்பட வேண்டுமா ? வஞ்சிக்கப்படவேண்டுமா ? சைவத்தின் பெயரால் அல்லது வைணவத்தின் பெயரால், ஏழை மக்கள் பாடுபட்டு உழைத்து அந்தச் செல்வங்களையெல்லாம் மடங்களுக்குத் தந்தால்தான் அறம் நிலைக்கும் என்று சொன்னால், அவர்களின் சித்தாந்தங்கள் என்ன ஆவது ? சமயக்கொள்கைகள் என்ன ஆவது ? பட்டிணத்தார் துறவுக்கு இலக்கணம் பாடினார். அதை எடுத்துச் சொல்லுகிறேன். "பசித்தால் புசித்து, வியர்த்தால் குளித்து, களைத்தால் தூங்கி, நிழல் கண்ட இடத்தையே மடமாகக்கொண்டு வாழ்கிறவர்கள் துறவிகள்" என்று சொல்லியிருக்கிறார். இவர்கள் நிழல் கண்ட இடத்தையே மடமாக்கிக் கொள்ளாமல், குளிர்ச் சாதனங்களைத் தேடித்தேடி அலைகிறார்கள். அப்படி குளிர்ச்சியை தேடித்தேடி அலைகிறவர்கள் துறவிகள் அல்ல என்று ஒப்புக் கொள்ளுகிறார்களா என்றால் அதுவும் இல்லை. அவர்களைப் பற்றி நான் தனிப்பட்ட வகையிலே பேச விரும்பவில்லை. மடாதிபதிகள் அறத்தை வளர்க்கவேண்டும். ஆகவே அவர்களுக்கு நிலம் இருக்கவேண்டுமென்று சொல்வதை நான் மறுக்கிறேன். மடாதிபதிகள் அறங்காக்கச் செல்வம் வேண்டுமென்று சொன்னால் வேறு வகையான செல்வம் அவர்களுக்குக் கிடையாதா ? பொன்னைக் குவித்து வைத்திருக்கவில்லையா ? கரன்ஸி நோட்டில் அவர்கள் கைபடாதா ? பாங்கு வரவு-செலவு கணக்கு அவர்களுக்கு சொந்தம் இல்லையா ? இரும்புப் பெட்டியில் ஏராளமான செல்வத்தைப் பூட்டிவைத்திருக்கிறார்கள், அதற்கு முன்னதாகவே தங்கள் இருதயத்தைப் பூட்டிவைத்துவிட்டு, அப்படிப்பட்ட செல்வம் அவர்களிடத்தில் இல்லையா ? அந்தப் பணம் துருப்பிடித்துப் போகவில்லையா ? ஒரு சில பேருக்கென வோட்டுகள் பிடிக்க பயன்படவில்லையா ? மடத்துக் கென வக்கீல்களை வைத்துக்கொள்ளுவதற்கு பயன்படவில்லையா ? ஏழைகளின் இடுப்பை ஒடிக்க பயன்படவில்லையா ? அழகான பல்லக்கு செய்துகொள்வதற்குப் பயன்படவில்லையா ? ரூ. 25,000-க்கு மேற்பட்ட கார் வாங்குவதற்குப் பயன்படவில்லையா ? தீவட்டிகளை வைத்துக்கொண்டு பட்டிணப் பிரவேசம் செய்வதற்குப் பதிலாக, காஸ்லைட், மின்சார விளக்குகளை போட்டுக்கொண்டு பட்டிணப் பிரவேசம் செய்வதற்குப் பயன்படவில்லையா ? உயர்ந்த நாதசுவர வித்வான்களை வைத்து இசை விருந்து கேட்கப் பயன்படவில்லையா ? ரேடியோ வைத்துக்கொள்வதற்கு பயன்படவில்லையா ? எந்தத் துறையில் பயன்படவில்லை ? அரசி யலில் ஈடுபட்டு தலைவர்களுக்குக்கூட அந்தப் பணம் பயன்படுகிறது. எந்தக் கட்சியை வெற்றி பெறச் செய்யவேண்டும் என்று எண்ணுவதற்குப் பயன் படுகிறது. பஸ் முதலாளிகள் தங்கள் கையிலுள்ள பணத்தை வைத்துக் கொண்டு அரசியலில் ஈடுபடுவதுபோல், மடாதிபதிகள் ஈடுபடுவதற்குப் பயன்படுகிறது. அந்த அளவுக்கு அவர்கள் ஈடுபடுகிறார்கள். அப்படிப் பட்டவர்களிடத்தில் நிலம் இருந்தால் தான் தர்மம் காப்பாற்றப்படுமா?

"மடாதிபதிகளிடத்தில் ஒழுக்கம் இருக்கிறது. நான் தான் பக்கத்தில் சென்று பார்த்தேன்" என்று சிலர் பேசுகிறார்கள். அதைக் கேட்க நான் வெட்கப்படுகிறேன். இங்கே பேசிய ஒரு நண்பர் "சவுக்கடி சந் திரகாந்தா" படம் வரவில்லையா என்று கேட்டார். ஆளுங்கட்சி உறுப் பினர் ஒருவர் சவுக்கடி சந்திரக்காந்தாவை அத்தியாயம் அத்தியாயமாக விளக்கும்படியாகக் கேட்டார்கள். விளக்கச் சொன்ன அதே நண்பர் பின்னர் பேசும்போது சொல்லுகிறார்கள், "சவுக்கடி சந்திரகாந்தா என்று இப்படியெல்லாம் பேசுகிறார்களே என்று" இப்படியெல்லாம் பேசும் வேடிக்கையைப் பார்த்தேன். அதே போல ஒரு அம்மையார் மடாதி பதிகளுக்கு மட்டுமா ஒழுக்கம் தேவை, மனிதனுக்குத் தேவை இல்லையா என்று கேட்டார்கள். மனிதனுக்கே ஒழுக்கம் தேவை என்றால், மடாதி பதிகளுக்கு ஒழுக்கம் தேவை இல்லையா ? மனிதனுக்கு ஒழுக்கம். . . .

19th September 1961]

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, Sir . . .

TEMPORARY CHAIRMAN (SRI N. K. PALANISAMI) : There can be no point of order on this.

SRIMATHI T. N. ANANDANAYAKI : The Chair cannot object to my raising a point of order. The Chair can give only a ruling நான் சொன்னதை அங்கத்தினர் அவர்கள் சரியாக புரிந்துகொள்ளவில்லை. மடாதிபதிகளுக்கு ஒழுக்கம் தேவை, தேவையில்லை என்று நான் சொல்லவில்லை. இன்னும் அதிகம் தேவை என்று சொன்னேன். அதை சரியாக புரிந்துகொள்ளாமல் பேசுகிறார்கள். கோவில் நிலங்களை ஆண்டவன் உழுது விளைவிக்கவில்லை. ஆண்டவன் சொத்தை திராவிட முன்னேற்றக் கழகத்தினர் ரொம்ப ஊரிலே உழுது ஏமாற்றி வருகிறார்கள் என்று . . .

SRI K. ANBAZHAGAN : The statement made by the hon. Member in the House should be expunged, because she has remarked that the party is exploiting the properties of mutts and temples.

TEMPORARY CHAIRMAN (SRI N. K. PALANISAMI) : It is only by way of personal explanation . . .

SRI K. ANBAZHAGAN : Even by way of personal explanation, the hon. Member should not indulge in making such a remark about the party.

உறுப்பினர் அவர்கள் எடுத்துக் கூறிய கருத்திற்கு என்னுடைய ஆழ்ந்த கண்டனத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். திராவிட முன்னேற்ற கழகத்தினரிடத்தில் மடாதிபதிகள் யாரும் ஏமாறவில்லை. அவர்களை ஏமாற்றுகிற வாய்ப்புபெற்ற, வசதி உள்ள கட்சியைச் சேர்ந்தவர்கள் தான் அவர்களைச் சுற்றியிருந்து, அண்டியிருந்து பிழைக்கிறார்கள். மற்ற வர்கள் அம்மாதிரி பிழைக்கவில்லை. அப்படி பிழைக்கிறவர்கள்தான் ஏமாற்றமுடியுமே தவிர, அவர்களை நெருங்காத நாங்கள் அம்மாதிரி பிழைக் முடியாது என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஒரு முறை நான் தருமபுரம் பக்கத்தில் ஒரு கல்லூரிக்குச் சென்ற போது ஒரு சம்பவம் நடந்தது. நான் ஒரு கல்லூரியில் பேசச் சென்ற போது, நான் அங்கு வாழ்ந்தவன் என்ற முறையில், அந்த மடாதிபதியின் சார்பில் என்னை அங்கும் பேச வேண்டுமென்று அழைத்து இருந்தார்கள். நான் மறுத்தும் அவர்கள் வற்புறுத்தினர். "இப்படிப்பட்ட மடங்களில் என்னுடைய திருவடி படாது" என்று கூறி வந்தேன். அப்படிப்பட்ட மனப்பான்மை உடையவன் நான். இப்படிப்பட்ட மடங்களை அடியோடு வெறுப்பவன் நான். அப்படியிருக்க, எங்கள் கட்சிக்காரர்கள் அந்த நிலங்களைக் கொண்டு உழுது ஏமாற்றி வருகிறார்கள் என்பதைக் கேட்டு ஏமாறவும் மாட்டேன். அதனால் உழவர் உரிமையைப் பறிக்கவும் இசைய மாட்டேன் என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறேன். பேசிய அந்த உறுப்பினர் "மடாதிபதிகளுக்கு ஒழுக்கம் தேவையென்றால் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒழுக்கம் தேவை இல்லையா ?" என்று குறிப் பிட்டார்கள். மனிதனுக்கு ஒழுக்கம் தேவை என்று சொல்லும்போது, ஆண்களுக்கு மட்டுமா, பெண்களுக்கும்தான் ஒழுக்கம் தேவை. (ஸ்ரீமதி அனந்தநாயகி : "மனிதன்" என்றால், ஆண், பெண் இருபாலாரையும் தான் குறிக்கும்.) பெண்களுக்கும் ஒழுக்கம் அவசியம் தேவை ; அப்படி ஒழுக்கத்தில் தவறுகிற பெண்கள் இருப்பதால்தான், அவர்கள் மடாதிபதி

களைச் சுற்றி அலையும் காரணத்தால்தான், மாயவரம் போன்ற பகுதிகளில், ஒரு காலத்தில் மடாதிபதிகள் ஒழுக்கம் கெட்டவர்களாக மாறினார்கள். அம்மாதிரி வழக்குகள் கோர்ட்டுக்கும் வந்திருக்கின்றன. எனக்குத் தெரியும் ஒழுக்கக் கேடு ஏற்படுவதைச் சொல்லுவது, மடாதிபதிகளே இருக்கக் கூடாது என்பதற்காக அல்ல. சமீபத்தில், காஞ்சீபுரத்தில் ஒரு மடத்திற்கு ஒரு மடாதிபதி தேவையாக இருந்தது ; அறநிலையத்தார் காவி கட்டிய ஒருவரைத் தேடி அனுப்பினார்கள் ; அதை மடத்து நிர்வாகிகள் குழு ஒத்துக்கொள்ளவில்லை. கோர்ட்டுக்குச் சென்று அவரை நீக்கினர். ஆகவே, அந்த மடத்துக்கு வேண்டிய வயது, தகுதி, பண்பு இவற்றோடு கூடிய ஒரு பெரியார் இன்றுவரை அவர்களுக்குக் கிடைக்கவில்லை. அந்த நிலை பற்றி அறநிலையப் பாதுகாப்பு அமைச்சருக்கும் தெரியும். அப்படிப்பட்ட நிலையில், இந்த நிலங்களை பண்பற்ற மடாதிபதிகள் கையில் விட்டுவைப்பது சரியா என்று மனச்சாட்சியைக் கேட்க வேண்டும். மடங்கள் இருக்க வேண்டாம் என்பதல்ல இதன் நோக்கம். மடத்து நிலமாவது அவர்களின் தனி உரிமையாக அல்லாமல் அரசாங்கத்தார் மேற்பார்வையில் இருக்க வேண்டும் என்பதுதான் நோக்கம். அவர்களாக உணவு உற்பத்தியை அதிகரிக்க முடியுமா ? பற்றாக்குறையைத் தீர்க்க முடியுமா ? அவர்கள் என்ன அக்ரிகல்சர் டிபார்ட்மெண்டா ? உழவு விவசாய ஆராய்ச்சி இலாகாவா ? ஏதோ, அவர்கள் இந்த உலகத்திற்கும் அந்த உலகத்திற்கும் பாலம் போடுகிறார்கள் ; இந்த உலகில் அவர்களை வாய்க்கால் வெட்டுங்கள், மதகு கட்டுங்கள் என்றால் அவர்களால் முடியாது. அவர்கள் செய்த பொதுப்பணிகள் என்ன ? பலபேருடைய கண்டனத்திற்குப் பிறகு, ஏதோ அங்கு ஒரு மருத்துவ மனையைக் கட்டினார் ஒரு மடாதிபதி. இங்கு ஒருவர் தமிழ் நூல்களை வெளியிட்டார். அது தவிர இந்த மடாதிபதிகள் செய்த புண்ணிய காரியங்கள் வேறு என்ன ? ஆனால் இங்கே அவர்களைப் பற்றியது அல்ல பிரச்னை ; இது நிலப் பிரச்னை பற்றியது. நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டுகிறேன் என்று சொல்லிவிட்டு, தேடித் தேடி ஆராய்ந்து இதற்கு வரம்பு இல்லை, அதற்கு வரம்பு இல்லை என்று சொல்லிக் கொண்டே போவது, அவர்கள் கையில் ஆயிரம் ஆயிரம் ஏக்கர் நிலம் என்ற தனி வழியில் போய்விடுகிறது. அரசியல் சட்டம் குறுக்கே நிற்கிறது. அறநிலைய நிலத்தைச் சேர்ப்பது தவறு என்றால், மாற்று வழியென்ன ? மாற்றுச் சட்டம் எங்கே ? இந்தச் சட்டத்தில் மட நிலங்களையும் சேர்க்கக் கூடாது என்றால், சரியான முறையில் இன்னொரு சட்டத்தைக் கொண்டு வர எவ்வளவு நாள் ஆகும் ? இப்பொழுதே கொண்டு வருவதற்கென்ன ? அமைச்சரவர்களுக்கு அதுகூட முடியவில்லையா ? இன்னும் ஆறு மாதம் சென்றால், எந்த அமைச்சர் போகிறார்களோ, எந்த அமைச்சர் வருகிறார்களோ. (குறுக்கீடு) அமைச்சர் சொல்லுகிறார்கள் "நீங்கள் வந்து விடுங்கள்" என்று. நல்ல எண்ணத்தோடுதான் சொல்கிறார்கள் என்று கருதுகிறேன். அதே நேரத்தில், அமைச்சரவர்களுக்கு எங்கள் கொள்கை என்ன, லட்சியம் என்ன என்பது நன்கு தெரியும். இருக்கிற அமைச்சர்கள் 15 ஆண்டு காலமாக குத்தகை எடுத்தது போல் இருந்தாலும் திரும்பி வரின் மனமார வாழ்த்துவோம் ; தெரிந்த முகங்களோடு பேசலாம், தெரியாத, அனுபவம் இல்லாத முகங்களோடு பேச வேண்டுமென்பதில்லை என்பதால். ஆனால் இன்னொரு சட்டம் வரும் என்று சொன்னார்களே, இப்பொழுதே அந்தச் சட்டம் வருவதற்கென்ன ? அம்மாதிரியான சட்டத்தை இப்பொழுதே மன்றத்தில் நுழைப்பதற்கென்ன ? அரசியல் சட்டம் இதற்குத் தடையென்றால், அந்த அரசியல் சட்டத்தை மாற்றுவதற்கென்ன ? மாற்ற முடியாவிட்டால், இன்னும் அதற்கேற்ப வேறு வழி வகை கண்டிருக்க வேண்டும். என்ன வழி செய்தார்கள் ? அறநிலைய நிலங்களை அற முறைப்படி பிரிக்கக் கூடாது என்று எண்ணுகிறார்களா? இவர்களுக்குச் சொல்லுகிறேன், "உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும், கல்லார் அறிவிலாதார்". ஆகவே, உலகத்திற்கு ஒரு நீதி, மடங்களுக்கு ஒரு நீதியா ? இப்படி மடங்களின் நிலங்களுக்கு விதி விலக்கு அளிப்பது, மக்களுக்கு நன்மை பயக்குமா ? இதனால் நாடு வாழப் போகிறதா ? பிற நாடுகளிலிருந்து திருட்டுத்தனமாக "ஸ்மகிள்ட் குட்ஸ்" கொண்டு வந்த பொருள்களை, யார் வைத்திருந்தாலும், தவறு தவறே. மடத்தில்

19th September 1961] [Sri K. Anbazhagan]

இருந்தால் அது குற்றமல்லவா ? அதே போல அற நிலையங்களின் பெயரால் இருந்தாலும், மடங்கள் பெயரால் இருந்தாலும், ஆலயங்களின் பெயரால் இருந்தாலும், இவ்வளவு பெரிய அளவில் நிலங்களை வைத்து இருப்பது தவறு என்ற காரணத்தால், அந்த நிலங்களை அரசாங்கமே எடுத்துக் கொள்ள, இந்த சட்டத்திற்கோ அல்லது வேறு சட்டத்திற்கோ உட்பட்டதாகச் செய்ய வழிவகை காணவேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் அரசாங்கம் தன் கடமையில் தவறுகிறது என்ற குற்றச்சாட்டைச் சொல்லி, கனம் கல்யாணசுந்தரம் சொன்னதுபோல இந்த இரண்டாவது பிரிவில் உள்ள இந்த விதி விலக்கைக் கைவிட வேண்டும் என்று அமைச்சரைக் கேட்டுக் கொண்டு, என் உரையை முடிக்கிறேன்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR :** தலைவர் அவர்களே, கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் இந்த இரண்டாவது செக்ஷன் வேண்டாம் என்று சொன்னதை ஆட்சேபித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். முக்கியமாக அவர்கள் இந்த அறநிலையப் பாதுகாப்பில் பல குற்றங்குறைகள் இருக்கின்றன என்று சொன்னார்கள். அவைகள் நல்ல முறையிலே நிர்வகிக்கப்பட வேண்டும் என்பதற்காக தனியாக ஒரு சட்டம் கொண்டு வருவதாக பொறுக்கு கமிட்டியில் அமைச்சரவர்கள் உறுதி சொன்னார்கள். அம்மாதிரி அவைகளை நல்ல முறையில் நடக்கச் செய்ய வேண்டிய பொறுப்பும் அரசாங்கத்திற்கு இருக்கிறது. எது எப்படியிருந்த போதிலும், அரசியல் சட்டத்தின் 19-வது, 26-வது விதிகளின்படி பல விலக்குகள் கொடுத்திருக்கும்போது, இந்தச் சட்டத்தில் இரண்டாவது செக்ஷன் போட்டிருப்பதும் நியாயம்தான் என்று கருதுகிறேன்.

(**Deputy Speaker in the Chair.**)

அநேகம் பேர்கள் பண்டைகாலம் தொட்டு தர்மத்திற்கு என்று நன்கொடையாகக் கொடுத்து, சொத்துக்களை எழுதி வைத்திருக்கிறார்கள். அதில் **specific performance** என்று சொல்வார்கள். அந்தப்படி, இன்னின்ன தர்மங்கள் செய்ய வேண்டும் என்று ஏற்படுத்தி, அவை தலைமுறை தலைமுறையாக நடந்து வந்து கொண்டிருக்கிறது. அது கல்விக்கு என்றும், மற்றபடி வைத்தியத்திற்கு என்றும், மற்ற தர்மங்களுக்காகவும் எழுதி வைத்திருக்கிறார்கள் ; தேசாந்திரிகளுக்கு அன்னதானம் செய்ய வேண்டும் என்றும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதனால், தொன்று தொட்டு ஒரு குறைவும் இல்லாமல் இவைகள் நடக்கும் என்ற எண்ணத்தினால், அப்படி எழுதி வைத்திருக்கிறார்கள். இம்மாதிரி ஸ்தாபனங்களில் தலையிட்டு இம்மாதிரி காரியங்களைச் செய்தால், பின்னிட்டு வருபவர்கள் சொத்துக்களை எந்த தருமத்திற்கும் வைக்க முன் வரமாட்டார்கள். அதே சமயத்தில், வைத்திருக்கும் சொத்துக்கள் நல்ல முறையிலே பயன் படுத்தப் படவேண்டும், அக்கிரமமான வழியில் சென்றால், அதைக் கண்டிக்க வேண்டும். அதே சமயத்தில், மற்ற கிருஸ்தவர்கள், முகம்மதியர்கள் இவர்கள் தர்ம ஸ்தாபனங்களில் தலையிட முடியாமல் இருக்கும்போது, ஹிந்து மதத்தில் தர்ம ஸ்தாபனத்தில் மட்டும் இம்மாதிரிச் செய்வது சரியா என்று பார்க்க வேண்டும். இந்த நிலங்கள் சம்பந்தப்பட்ட வரையிலும், சாகுபடியாளர்களுக்கு பாதுகாப்பு இருக்கிறது, கூட்டுறவுப் பண்ணைகள் வைத்து நடத்துவோம் என்று கனம் அமைச்சர் சொல்லியிருக்கிறார். ஆகவே, இவற்றையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு, யாருக்கும் துன்பம் வராத முறையில் இந்த செக்ஷன் அமைக்கப்பட்டிருப்பதை பொறுக்குக் குழுவிலும் சொன்னார்கள், கனம் அமைச்சர் பதிலிலும் சொல்வார்கள் என்று நம்புகிறேன்.

இம்மாதிரியாக நாம் அடிப்படையில் பாதிக்கக்கூடிய காரியங்களைச் செய்தால் தர்ம சிந்தனையுடையவர்கள் மேலும் தர்மங்களைச் செய்ய முன் வரமாட்டார்கள். தர்மம் செய்வதற்கு அச்சப்படுவார்கள். அதன் பிறகு தர்மம் இருக்காது இந்த நாட்டில். இப்படிப்பட்ட காரணங்களினால் அந்த இரண்டாவது செக்ஷன் அப்படியே இருக்க வேண்டும். அதை ஒப்புக் கொள்ள வேண்டும் என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை இத்துடன் முடித்துக் கொள்கிறேன். 11-30 a.m.

[19th September 1961

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, அற நிலேயப் பாதுகாப்புப் பொறுப்பை வகிக்கும் வகையில் நம் அரசாங்கத்தின் நிலேமை என்ன என்பதுபற்றி நான் விளக்கம் கூற விரும்புகிறேன். கனம் அங்கத்தினர் அன்பழன் அவர்கள் தனக்கே உகந்த பிரத்யேகமான நடையில் நாங்கள் யாருக்கோ அடிமைப் பட்டு விட்டதாகக் கூறினர். எங்களேப்பற்றியும், எங்கள் பரம்பரைபற்றியும் இந்த மன்றம் நன்கறியும். (ஆரவாரம்) அதுபற்றி உலகமே உணர்ந் திருக்கிறது. எவ்வாறு நாங்கள் அடிமை வாழ்க்கையை அகற்றிேனும் என்று நன்கு தெரியும். (ஆரவாரம்) மோசம் செய்கிறவர்கள் யாரா யினும் நாங்கள் அனுமதிக்க மாட்டோம். மதத்தின் பெயரால் மோசம் செய்கிறவர்களாயினும், அரசியல் பெயரால் மோசம் செய்கிறவர்களாயினும் அவர்களே அனுமதிக்க மாட்டோம். (ஆரவாரம்) வேறு எந்த வகையில் மோசம் செய்வதாயினும் அதற்கும் இடம் கொடுக்க மாட்டோம். அதைப் போலவே சுரண்டுகிறவர்களுக்கும் இடம் கொடோம். இதைத் தடுக்க பல சட்டங்கள் இயற்றியுள்ளோம். அறநிலேய சொத்துக்கள் சம்பந்தமான சட்டத்தை இந்த மன்றத்தில் சமர்ப்பித்தபோது அற நிலேயங்களுக்குச் சொந்தமான எந்த சொத்துக்களேயும் நாங்கள் விட்டுவிடவில்லே. முதலில் இந்த மசோதா வந்தபோது மனிதனுக்கு உச்ச வரம்பு முப்பது ஏக்கர் என்றும் தர்ம ஸ்தாபனங்களுக்கும், கோயில்களுக்கும், உச்ச வரம்பு இருநூறு ஏக்கர் என்றும் கொண்டு வந்தோம். அதன்பிறகு பொறுக்குக் கமிட்டியில் அதைப்பற்றி பரிசீலனே செய்தபோது அறநிலேயங்களுகே உச்ச வரம்பு கட்டுவது சரியல்ல, அது அரசியல் அமைப்புச் சட்டத்திற்கு முர ணனது, அப்படி அரசியல் சட்டத்திற்கு முரணுக சட்டம் செய்தால் இந்தச் சட்டம் பூராவுமே பாதிக்கப்படும் என்று கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன. அதைப்பற்றி நாங்கள் பரிசீலனே செய்து பார்த்தோம். கனம் அங்கத் தினர்களும் அதைப்பற்றி பரிசீலனே செய்து பார்த்தார்கள். அது சட்டத் திற்கு முரணனது என்றும், அதனல் முழு சட்டமே போனலும் போய் விடும் என்று கருதியதால்தான் இந்த இரண்டாவது பிரிவு சேர்க்கப் பட்டது. அரசியல் அமைப்புச் சட்டம்கூட எவ்வளவோ தடவை மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறதே. அதைப்போலவே இப்பொழுதும் என் மாற்றி அமைக்கக் கூடாது என்றும் கூறினர்கள். அதற்கு அவசியம் ஏற்பட்டால் அதை மாற்றி அமைப்பதற்கும் நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். இப்பொழுது இருக்கக்கூடிய நிலேமையில் அரசியல் அமைப்புச் சட்டத்தை மாற்றி அமைக்க வேண்டிய அவசியம் இருப்பதாகத் தெரியவில்லே. நஷ்ட ஈடு கொடுக்கும் சம்பந்தமாககூட மாற்றி அமைக்கப்பட்டது. அந்த முறையில் அவசியம் ஏற்பட்டால் அப்பொழுது மாற்றி அமைக்க நட வடிக்கை எடுத்துக்கொள்ளப்படும். அது கனம் அங்கத்தினர்களுக்கு நன்றுகத் தெரியும்.

எந்த முறையில் அரசியல் அமைப்புச் சட்டம் தடையாக இருக்கிறது என்பதைப்பற்றி கனம் அங்கத்தினர்களுக்குக் கொஞ்சம் விளக்க விரும்பு கிறேன். தர்ம ஸ்தாபனங்களின் சொத்தைப்பற்றி சட்டம் செய்வதென்றல் அதைப்பற்றிய பிரிவு அரசியல் அமைப்பு சட்டத்தில் 26-வது ஆர்ட்டிகிள் இருக்கிறது. தர்ம ஸ்தாபன சொத்துக்களே எந்த விதத்தில் கட்டுப் படுத்துவது என்பதைப்பற்றி அந்தப் பிரிவில் நன்றுக விளக்கப்பட்டிருக் கிறது. அதற்கு நேர்மாருக 19-வது ஆர்ட்டிகிள் இருக்கிறது. இதை கனம் அங்கத்தினர்கள் நன்றுக கவனிக்க வேண்டும். ஆர்ட்டிகள் 19-ப்படி சாதாரணமாக தனிப்பட்டவர்கள் சொத்துக்களே வைத்துக் கொண்டிருப் பவர்களே எப்படி கட்டுப்படுத்துவது என்பதைப்பற்றி குறிப்பிடப்பட்டிருக் கிறது. அந்த வகையில் அவர்களுக்கு 30 ஏக்கர் என்று வைக்கப் பட்டிருக்கிறது. அதே மாதிரி தர்ம ஸ்தாபனங்களுக்கு இல்லே. தர்ம ஸ்தாபனங்களேப்பற்றி குறிப்பாக 26-வது பிரிவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எப்பொழுது அதற்கு என்று தனியாக குறிப்பிடப்பட்டிருக்கிறதோ அதனல் அதை மாற்றி அமைப்பது என்பது முடியாது. எப்பொழுது தர்ம ஸ்தாபன சொத்துக்களுக்கு என்று தனியாக ஒரு பிரிவு அமைக்கப்பட்டிருக்கிறதோ அதற்கு நாம் மதிப்புக் கொடுக்க வேண்டும். அதனல்தான் தர்ம சொத்

துக்களுக்கும், கோயில் சொத்துக்களுக்கும், விதி விலக்குக் கொடுக்கப் பட்டிருக்கிறது. இரண்டிற்கும் வித்தியாசம் காட்ட வேண்டும் என்பதற் காகத்தான் அரசியல் சட்டத்தில் அப்படி போடப்பட்டிருக்கிறது.

ஆகவே 26-வது பிரிவு தனியாக இருப்பதால் அவைகளுக்கு விதி விலக்கு கொடுக்க வேண்டியதும் அவசியமாக இருக்கிறது. அதுதான் நமக்குள்ள ஒரு சங்கடம். மத்திய சர்க்காருக்கு எழுதி அதை ஏன் மாற்றி அமைக்கக் கூடாது என்று சொல்லுகிறார்கள். நமக்கு அதை மாற்றி அமைக்க வேண்டும் என்று அவசியம் ஏற்பட்டால் அப்பொழுது மத்திய அரசாங்கத்திற்கு எழுதி அதை மாற்றி அமைத்துக்கொள்ளலாம்.

SRI M. P. SUBRAMANIAM : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, பண்ணையாள் பாதுகாப்புச் சட்டத்தையும், நியாயவார சட்டத்தை யும் வெளியேற்றத்தை தடுக்கும் சட்டத்தையும் நிறைவேற்றும்போது அரசியல் சட்டம் அவைகளுக்குத் தடையாக இல்லையா என்பதைப்பற்றி விளக்க வேண்டும்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் ஹோல்டிங்கை பாதிக்கவில்லை. இது ஹோல்டிங்கை பாதிக்கிறது. இது ஹோல்டிங்கை பாதிப்பதால்தான் அரசியல் சட்டத்தை குறிப்பிட வேண்டியதாக இருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : அரசியல் சட்டம் 26-வது பிரிவிற்கு நான்கு உப பிரிவுகள், அதாவது ஏ, பி, சி, டி என்று இருக் கின்றன. அந்த 'டி' உப பிரிவில் என்ன சொல்லப்பட்டிருக்கிறது என்றால் . . .

'Article 26 : (b) to manage its own affairs in matters of religion;

(c) to own and acquire movable and immovable property; and

(d) to administer such property in accordance with law.'

என்று 'டி' உப-பிரிவு ரொம்ப தெளிவாக இருக்கிறது. பிரிவு 19 (1)-க்கு என்ன ப்ரோவைசோ இருக்கிறதோ அதே ப்ரோவைசோதான் இதற்கும் இருக்கிறது. இது சம்பந்தமாக பாசுவின் காமெண்டரியை (Basu's commentary) கவனித்தால் நன்றாகத் தெரிய வரும்.

(C) *Right to own property.*—This clause confers on every religious denomination the right to own and acquire property but does not prevent property belonging to a religious body being acquired by authority of law'.

அந்த முறையில் இந்தச் சட்டம் தெளிவாகத்தான் இருக்கிறது. எந்த விதமான தடையும் இருப்பதாகத் தெரியவில்லை. எந்த நிலத்தையும் சர்க்கார் எடுத்துக் கொள்ளலாம் என்றுதான் தோன்றுகிறது. எனக்குத் தெரிந்த மட்டில் முரண் இருப்பதாகத் தெரியவில்லை.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பாசுவின் காமெண்டரியில் சொல்வதெல்லாம் அக்வயர் பண்ணுவதைப்பற்றிதான். பப்ளிக் பர்பசுக்கு அக்வயர் பண்ணுவதாக இருந்தால் அதாவது பள்ளிக் கூடத்திற்கோ அல்லது பொது காரியங்களுக்கோ அக்வயர் பண்ணுவதாக இருந்தால் அதற்கு இடம் இருக்கிறது. அது சம்பந்தமாகத்தான் அந்தக் காமெண்டரி இருக்கிறது. அந்தக் காமெண்டரியை இந்தச் சட்டத்திற்கு எடுத்துக் கொள்ள முடியாது. ஆகவே 19-வது பிரிவுக்கும் 26-வது

பிரிவுக்கும் வித்தியாசம் இருக்கிறது என்பதை திரும்பவும் குறிப்பிட விரும்புகிறேன். அரசியல் அமைப்புச் சட்டத்தை இயற்றும்போது அதை இயற்றிய கர்த்தாக்கள் இப்படி வித்தியாசம் இருக்க வேண்டும் என்ற எண்ணத்துடனேயேதான் இப்படி தனியாக 26-வது பிரிவை அமைத்திருக்கிறார்கள். இதைத்தான் நாம் நன்றாக கவனிக்க வேண்டும். சுப்ரீம் கோர்ட்டுக்குப் போவார்கள் என்ற எண்ணத்தில் சட்டம் செய்யக்கூடாது, போகிறவர்கள் போகத்தான் போவார்கள். அதனால் நாம் சட்டத்தைச் செய்யும்போதே சுப்ரீம் கோர்ட்டுக்குப் போவார்கள் என்ற எண்ணத்தில் சட்டம் செய்யக்கூடாது. சட்டம் செய்யும்போதே இருக்கக்கூடிய சட்டத்திற்கு முரணாக சட்டம் செய்யக்கூடாது என்பதற்குத்தான் இந்த இரண்டாவது பிரிவை இந்த மசோதாவில் சேர்த்திருக்கிறோம். முரணான சட்டம் செய்தால் முழு சட்டமே போய்விடும் என்ற காரணத்தால் இது சேர்க்கப்பட்டிருக்கிறது. அந்த முறையில்தான் தர்ம சொத்துக்கள் ஒதுக்கப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார், அதை ஏன் மாற்றி அமைத்துக் கொள்ளக்கூடாது என்று. அவசியம் ஏற்பட்டால் அப்பொழுது மாற்றி அமைத்துக் கொள்ளலாம்.

மாற்றுவது அவசியம் இல்லை என்பதைப்பற்றி சில வார்த்தைகளைக் குறிப்பிட விரும்புகிறேன். இப்பொழுது நடைபெற்ற விவாதத்தில் ரொம்ப சுருக்கமாகவும் ருசிகரமாகவும் பல விஷயங்களை யெல்லாம் பேசினார்கள். மடங்களைப்பற்றியும், கோயில்களைப்பற்றியும், சமயத்தைப்பற்றியும் எல்லாம் பேசினார்கள். சிலர் லீலைகளைப்பற்றிகூட வர்ணித்தார்கள். சீரிய பண்பாட்டைப்பற்றியும் பேசினார்கள். சீரிய சிந்தனையைப்பற்றிகூட பேசினார்கள். மடங்களைப்பற்றியும், கோயிலைப்பற்றியும் கனம் பழனிசாமி பேசினார். அவரே ஒரு கோயிலின் தர்மகர்த்தா. அவருக்கு கோயில்களில் அக்கரை உண்டு. பொறுக்குக் கமிட்டியில்கூட கோயில்களைப்பற்றி எவ்வளவோ அக்கரை எடுத்துக்கொண்டு பேசினார். கோயில்கள் எல்லாம் நல்ல முறையில் நடக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உண்டு. நிர்வாகம் கோயிலில் நன்றாக நடக்க வேண்டும் என்றுகூட அக்கரை உண்டு. அவர் தர்மகர்த்தாவாக இருக்கக்கூடிய ஒரு கோயிலுக்குக்கூட நான் வர வேண்டும் என்று அழைத்துக் கொண்டிருக்கிறார். அங்கு எனக்கு இன்னும் போக முடியவில்லை. அவர் கோயிலுக்கு நன்றாக தொண்டு செய்து வருகிறார். அவர் தொண்டு தமிழ் நாட்டுக்கு நல்ல பயனளிக்கும். ஆனால் அவர் சில மடங்களும் கோயில்களும் மோசமாக இருக்கிறது என்றும் சொல்லுகிறார். மற்ற அங்கத்தினர்கள்கூட அதைப் பற்றி பேசினார்கள்.

மனிதனுக்கு முப்பது ஏக்கர், கோவிலுக்கும், மடத்திற்கும் 200 ஏக்கர் உச்ச வரம்பு என்று முதன் முதலில் போட்டோம். இன்றைக்குப் பேசினவர்களில் யாரும் " 200 ஏக்கர்கூட வைக்கக் கூடாது, 30 ஏக்கர் இருக்கலாம், 40 ஏக்கர் இருக்கலாம் " என்று பேசவில்லை.

நாம் முதலில் கொண்டுவந்த மசோதாவின்படி உபரியாக இருக்கும் நிலத்தை எடுத்துக்கொள்ளும்போது நஷ்ட ஈடு கொடுப்பதுபற்றி குறிப்பிட்டிருக்கிறோம். சாதாரணமாக நபருக்கு 50 ஏக்கர் ஒன்றும் பிரமாதம் இல்லை. அதில் முப்பது ஏக்கர் உச்ச வரம்பு என்று போட்டு, இருபது ஏக்கருக்கு நஷ்ட ஈடு கொடுக்கிறோம். நஷ்ட ஈடு கொடுக்கும்போது எம்மாதிரி கொடுப்பது என்று அந்த மசோதாவில் கண்டிருக்கிறது.

ஆனால், தரும ஸ்தாபனமாக இருந்தால், அதற்குப் பிரத்தியேகமான விகிதத்தில் நஷ்ட ஈடு தரப்படுகிறது. அதாவது, அரசாங்கம் ஆர்ஜிதம் செய்த சொத்திலிருந்து நிகரமாக என்ன வருமானம் வந்துகொண்டிருந்ததோ, அதை அப்படியே நஷ்ட ஈடாகக் கொடுத்து விடுவது என்று கண்டிருந்தது. அப்படி நஷ்ட ஈடு தந்துவிட்டால், நிலவரி ரெமிஷன் கேட்பது, மகசூலைக் குத்தகைதாரர்களிடமிருந்து வசூல் பண்ணுவது, விவசாய வேலைக்கு ஆள் வைப்பது போன்ற வேலை எதுவும் இல்லாமல் அலட்டமாகப் போய்விடுகிறது. ' நெட் இன்கம் ' எவ்வளவு வந்ததோ

19th September 1961] [Sri M. Bhaktavatsalam]

அதை அந்த ஸ்தாபனத்திற்கு அப்படியே கொடுத்துவிடுவது என்பது மசோதா. அதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. "தரும ஸ்தாபனங்களுக்கு மாத்திரம் எதற்காக அந்த அளவு நஷ்ட ஈடு கொடுப்பது? மற்றவர் களுக்குக் கொடுக்கிற மாதிரியே அவர்களுக்கும் கொடுத்தால் போதா?" என்று யாரும் கேட்கவில்லை. கோவில் எதற்கு, திட்டம் எதற்கு என்று சொன்ன அங்கத்தினர்கூடக் கேட்கவில்லை. கடைசியாகப் பேசிய கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் கூட 'இவ்வளவு நஷ்ட ஈடு வேண்டாம்' என்று சொல்லவில்லை; சொல்லத் துணியவும் இல்லை.

**Sri M. KALYANASUNDARAM:** இந்த மசோதாவில் அது இல்லையே.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM:** 'ஒரிஜினல்' மசோதாவில் இருந்தது. அதைத்தான் கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனி வாச அய்யர் அவர்கள் குறிப்பிட்டார்கள். இப்படி நஷ்ட ஈடு கொடுத்து விட்டால், பிறகு அந்த ஸ்தாபனத்திற்கு என்ன குறைவு இருக்கப் போகிறது? ஒரு குறைவும் இருக்காது. ஸ்தாபனம் நடத்துகிறவர்களுக்கும் குறைவு இல்லை. சாமிக்கும் குறை இல்லை. ஆக, முதலிலே கொண்டு வந்த மசோதாவினுல் அவர்களுக்கு ஒன்றும் குறைவு இல்லை. தொந்தரவு இல்லாமல் பணம் கொடுப்பதாகத்தான் அதில் போட்டிருந்தோம். அந்தப் பணத்தை வைத்துக்கொண்டு அவர்கள் இஷ்டம்போல் முன்னைவிட அதிக மாகச் செய்யக்கூடும்—நாம் முதலில் போட்ட மசோதாவின்படி. இன்று விவாதத்தில் கலந்துகொண்டு எந்த அங்கத்தினரும் அதை ஆட்சேபிக்க வில்லை. நிலத்தில் சரியாக விளையவில்லையே, ரெமிஷன் கேட்கவேண்டுமே என்று தொல்லை எதுவும் இல்லாமல், நிகர வருமானம் என்ன வந்ததோ அதை வருஷா வருஷம் அரசாங்க பொக்கிஷத்திலிருந்து கொடுக்கிறோம் என்று ஏற்றுக்கொள்ளுகிற பிரிவு இருந்தது அப்பொழுது.

ஆனுல், கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் சொன்ன மாதிரி—அப்படி அரசியல் சட்டத்தை மாற்றி இம்மாதிரி செய் தால் என்ன ஆகும்? பொது மக்களுடைய வரிப் பணத்தைத்தான் எடுத்துக் கொடுக்க வேண்டும். இத்தகைய ஸ்தாபனத்தில் அக்கரை இல் லாதவர்களுடைய வரிப் பணத்தைக்கூட எடுத்துக் கொடுக்கவேண்டும். அந்த நிலைதான் வந்துவிடும். ஒரு கனம் அங்கத்தினர் குறிப்பிட்டபடி, இது ஹிந்து மத ஸ்தாபனங்களுக்கு மாத்திரம்தான் என்பது இல்லை. முகமதிய மதம், கிறிஸ்துவ மதம் இவைகளைச் சார்ந்த ஸ்தாபனங்களும் இருக்கின்றன. அவைகளுக்கும் சொத்து இருக்கிறது.

பொறுக்குக் கமிட்டியின் முன் சாட்சியம் சொல்லிய பாதிரிமார்கள்கூட அதுபற்றிக் குறிப்பிட்டார்கள். "கிறிஸ்துவ மத ஸ்தாபனங்களுக்குச் சொத்து இருக்கிறது. அந்தச் சொத்து ஏதோ சர்ச்சுக்கும் உபயோகப் படுகிறது. ஆனுல், பெரும்பாலும் கல்வி ஸ்தாபனங்களுக்கு உபயோகப் படுகிறது. ஒரு டயஸீஸுக்கு முப்பது ஏக்கர் என்று வைத்தால், அது நான்கைந்து ஜில்லாக்களிலே இருக்கிறது. ஒரு டயஸீஸுக்கு 200 ஏக்கர் என்று வைத்தால்கூடப் போதாது" என்று அவர்கள் குறிப்பிட்டார்கள். கல்வி ஸ்தாபனங்கள் முக்கியமாக கிறிஸ்துவ மத ஸ்தாபனங்களில் இருக் கின்றன. ஹிந்து மத ஸ்தாபனங்களிலும் கல்வி ஸ்தாபனங்கள் நடக்காமல் இல்லை. ஆனுல், கிறிஸ்துவ மத ஸ்தாபனங்களைப் பொறுத்த மட்டிலும் அவைகளோடு கல்வி ஸ்தாபனங்கள் அதிகமாக இருக்கின்றன. ஒன்றோ டொன்று இணைக்கப்பட்டிருக்கிறது. அதைப் பிரிக்க முடியாது. அம்மாதிரி அமைந்திருக்கிறது. அவர்கள் குறிப்பிட்டார்கள், "கல்வி ஸ்தாபனங்கள் பாதிக்கப்படுமே, 200 ஏக்கர் போதாது, ஒரு ஹோல்டிங் ஒரு கிராமத்திலேயே ஒரு ஸ்தாபனத்திற்கு இல்லை. பரவலாக இருக்கிறதே" என்று.

இதற்கெல்லாம் உச்ச வரம்பு நாம் கட்டுவோம் என்றால், அதற்கான நஷ்ட ஈடாக பொது மக்களின் வரிப் பணத்தைத்தான் கொடுக்கவேண்டும். அப்படி நஷ்ட ஈடாகப் பெறும் பணத்தைச் சரியாகச் செலவிட்டுவிடுவார்கள்

என்று சொல்ல முடியாது. துஷ்பிரயோகம் செய்தாலும் அதைத் தவிர்ப்பதற்கில்லே. ஏதோ உச்ச வரம்பு கட்டிவிட்டோம் என்று மனத்திலே திருப்திப் பட்டுக்கொள்ளலாம். உச்ச வரம்பு கட்டிவிட்டால் நஷ்ட ஈடு கொடுக்கக் கடமைப்பட்டவர்களாயிருக்கிறேம். அப்படியில்லாமல், அவர்களிடமிருந்து நிலத்தை எடுத்துக்கொள்ள முடியாது. இருநூறு ஏக்கர் உச்ச வரம்பு என்று வைத்து நஷ்ட ஈடு கொடுப்பது என்று வைத்துக் கொண்டால், அப்பொழுது அவர்கள் இன்னும் அதிகத் தவறு செய்ய இடம் கொடுக்கும். அவதி இல்லாமல் வருஷா வருஷம் பணம் சர்க்கார் பொக்கிஷத்திலிருந்து வாங்கி வைத்துக்கொண்டு அவர்கள் இஷ்டம்போல் செய்யக்கூடும். ஆனுலும், அவர்கள் இஷ்டம்போல் செய்ய முடியாத அளவுக்குச் சட்டம் இருக்கிறது. ஹிந்து அற நிலேயப் பாதுகாப்புச் சட்டமும் முஸ்லிம் வாக்ப் சட்டமும் இருக்கின்றன. பொதுவாக, மத ஸ்தாபனங்கள், தரும ஸ்தாபனங்கள் இவைகளுக்குள்ள நிலங்களேப் பொறுத்து நன்ருக ஆராய்ந்து, சிறந்த சட்டம் செய்ய வேண்டுமென்ற யோசனேகூட அரசாங்கத்திற்கு இருக்கிறது.

SRI K. ANBAZHAGAN: தலேவர் அவர்களே, அமைச்சர் அவர்கள், 'நஷ்ட ஈடு தருவதாக இருந்தால் அதிகப் பணம் தர நேரிடும்' என்று தெரிவிக்கிருர். ஏறத்தாழ எட்டாயிரம் ரூபாய் வருமானம் உள்ள இடத்தில் 800 ரூபாய் தஸ்திக் அலவன்ஸ் என்ற வகையில் தருவதாக கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் குறிப்பிட்டார்கள். அப்படி தஸ்திக் அலவன்ஸ் பத்திலொரு பங்கு என்று இருக்கிறது. அப்படிச் செய்தால், ஏராளமான நிலம் பொதுமக்களுக்குக் கிடைக்கும், அவர்களுக்கு தரும் நஷ்ட ஈட்டுத் தொகையும் ஏறத்தாழ அந்த அளவுக்கு மிகக் குறைவாக இருக்குமானுல், அதை அரசாங்கம் கவனிக்கக் கூடாதா என்று கேட்கிறேன்.

SRI R. SRINIVASA IYER: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் என்னுடைய பேச்சைத் தவருகக் குறிப்பிடுகிருர். தஸ்திக் அலவன்ஸ் காலா காலத்தில் வருவதில்லே என்று நான் சொன்னேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ஜமீன் ஒழிப்புச் சட்டம், இனும் ஒழிப்புச் சட்டம் செய்தபோது அப்போதே ஒப்புக்கொள்ளப்பட்ட கொள்கை இது. ஜமீந்தார்களுக்கும் மற்றவர்களுக்கும் நஷ்ட ஈடு ஒருவாறு கொடுக்கப்பட்டது. அது அதிகம் இல்லே. ஆனுல், தேவஸ்தான தரும ஸ்தாபனங்களுக்குச் சொந்தமான ஜமீன் என்ருல், அதற்கு அதிகமாக நஷ்ட ஈடு கொடுப்பது என்பது முன்பே ஒப்புக்கொள்ளப்பட்டு, இந்தச் சட்ட மன்றத்திலே சட்டம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் திரு. ஸ்ரீனிவாச அய்யர் அவர்கள் குறிப்பிட்டபோது, 'அது அமுலுக்கு வரவில்லே, ஆகையால், குறைவாகக் கொடுக்கப்படுகிறது' என்று சொன்னுர்கள்.

தரும ஸ்தாபனங்களுக்குக் குறைவாக நஷ்ட ஈடு கொடுக்கலாம் என்று சொல்லப்படலாம். தரும ஸ்தாபனத்திற்கு யாரோ சொத்து எழுதி வைத்தார்கள். குறிப்பிட்ட காரியங்கள் நடக்க வேண்டும் என்று எழுதி வைத்தார்கள். பல திட்டங்களே வகுத்து வைத்தார்கள். அவை நடக்கவேண்டும். அவை நடக்கவேண்டிய அளவுக்கு நஷ்ட ஈடு கொடுக்கத்தான் வேண்டும். இதற்கு என்று பிரத்தியேகமான ஒரு முறையை—நஷ்ட ஈடு கொடுக்கின்ற முறையை—அமைத்திருந்தோம். ஆனுல், இப்பொழுது இதற்கென அரசியல் சட்டத்தை மாற்றவேண்டிய அவசியம் இல்லே என்று இந்த அரசாங்கம் கருதுகிறது என்று நான் சொன்னேன். வரி கொடுப்போருடைய—பொது மக்களுடைய—பணத்தை எடுத்து சர்க்கார் இந்த நஷ்ட ஈட்டை ஒப்புக்கொண்டு கொடுப்பதைவிட—அரசாங்கம் முக்கியமாகக் கவனிப்பது—எழுதி வைக்கப்பட்ட அறங்கள் நல்ல முறையிலே நடக்க வேண்டும், நிலத்திலிருந்து நல்ல முறையிலே சாகுபடி செய்யப்பட வேண்டும், பயிரிடு

இறவர்கள் சுரண்டப்படக்கூடாது என்பது. அரசியல் சட்டத்திற்கு முரண் பாடு இல்லாமல் இதையெல்லாம் பார்த்துக்கொள்ள முடியும். அரசியல் சட்டத்தின் 26-வது ஆர்ட்டிலேயே அதற்கு இடம் இருக்கிறது. எப்படி அற நிலையப் பாதுகாப்புச் சட்டம் செய்திருக்கிறோமோ அதே மாதிரி தரும கர்த்தாக்களோ, மடாதிபதிகளோ, நடுக்குத்தகைக்காரர்களோ புகுந்து சுரண்டுவதற்குக் கொஞ்சங்கூட இடமில்லாமல் நல்ல முறையில் சாகுபடி செய்வதற்கு நாம் ஏற்பாடு செய்யக்கூடும். அதை இப்பொழுதிருக்கும் அரசியல் சட்டத்திற்கு உட்பட்டுச் செய்யலாம். அதற்கு என்று ஒரு தனிச் சட்டம் கொண்டுவருவதுபற்றி அப்போதே, பொறுக்குக் கமிட்டி விவாதத் தின்போதே, குறிப்பிடப்பட்டது. அந்த யோசனையை உடனடியாக எடுத்துக் கொண்டு, அப்படிப்பட்ட மசோதா இப்பொழுது தயாரிக்கப்பட்டு வருகிறது. நாம் தயாரித்து வரும் மசோதாவின் முக்கியமான அம்சம் என்ன வென்றால், பயிரிடும் குடிகளுக்குப் பரிபூரணமான பாதுகாப்பு அளிக்க வேண்டும், அவர்களை அப்புறப்படுத்தக் கூடாது என்பது முதலாவது. நியாய வாரம்தான் அவர்களிடமிருந்து வாங்கப்பட வேண்டும் என்பது இரண்டாவது. அவரவர்கள் இஷ்டம்போல் செய்வதற்கு விட்டால், போதிய வசதி இல்லாமல் போய்விடும். ஆகையால், கூட்டுறவுப் பண்ணை அமைத்துக் கொடுத்து, அந்தக் கூட்டுறவுப் பண்ணை மூலமாகவே அவர்கள் நிலத்தைச் சாகுபடி செய்ய வேண்டும். இப்பொழுது பயிரிடுகிறவர்களை அப்புறப்படுத்து வதில்லை. அவர்களையெல்லாம் சேர்த்து வைத்துக் கூட்டுறவுப் பண்ணை அமைக்கவேண்டும். சுரண்டுகிறவர்களுக்கு இடம் இல்லை. நடுக் குத் தகைக்காரர்களுக்கும் இடம் இல்லை. கூட்டுறவுச் சங்கம் வைத்து, அதன் மூலமாக விவசாயிகள் வசதி பெறச் செய்வதன் மூலம் நல்ல முறையில் விவசாயம் நடைபெறும். அதனால் பயிரிடுகிறவர்களுக்கும் பலன் உண்டு. தரும ஸ்தாபனங்களும் பலன் அடையும், அந்த வகையில் சட்டம் அமைப் பது என்றுதான் இந்த அரசாங்கம் பரிசிலனை செய்து வருகின்றது. சட்டம் செய்வதென்று சொல்லி, பத்து வருஷம் ஆச்சே, எட்டு வருஷம் ஆச்சே என்று சொல்லலாம். ஐந்தாண்டுத் திட்டத்திற்குப் பத்தாயிரம் கோடி தானு, இருபதாயிரம் கோடி இல்லையா, முப்பதாயிரம் கோடி வைக்கக் கூடாதா என்று ஏலம் போடுகிற மாதிரிப் பேசிவிடலாம். ஆனுல், சட்டம் என்றால் எல்லாம் பார்த்துத்தான் செய்யவேண்டும். சட்டம் செய்யும் போது சிக்கல் இல்லாமல், கூடியவரையில் தாமதம் இல்லாமல் சீக்கிரம் செய்ய வேண்டும் என்றுதான் அரசாங்கம் சம்பந்தப்பட்ட இலாகா நிபுணர் களிடத்தில் வற்புறுத்திக்கொண்டு வருகிறது. கோடைக்கானலில் பொறுக்குக் கமிட்டி கூடியபோது, இந்த யோசனை முதன் முதலில் தெரிவிக்கப்பட்டது. அன்றே இதற்கு நடவடிக்கைகள் தொடங்கப்பட்டு விட்டன. இது கவனிக்கப்பட்டு வருகிறது. அவசர அவசரமாகச் செய்தால், சட்டம் செய்த மறு நாளே யாராவது கோர்ட்டுக்குப் போய், அதில் தப்பு இருக்கிறது என்று சொல்லக்கூடும். அதற்கெல்லாம் இடமில்லாமல் நல்ல முறையில் செய்ய வேண்டும் : நம்முடைய லட்சியத்தையும் நிறைவேற்ற வேண்டும். பயிரிடுகிறவர்களையும் பாதுகாக்க வேண்டும். விவசாயமும் நல்ல முறையில் நடைபெற வேண்டும், தரும ஸ்தாபனங்களுக்கும் பலன் ஏற்பட வேண்டும் என்ற வகையில் இந்த மசோதா இப்பொழுது தயாரிக்கப் பட்டு வருகிறது. வருகிற மாதத்திலேயே இந்தச் சட்ட மன்றத்திலேயே இந்த மசோதாவைப் பிரேரேபிக்க முடியும் என்று நான் எதிர்பார்க் கிறேன். இப்பொழுது சபைமுன் இருக்கிற இந்த மசோதாவை இங்கு இந்த மாதத்தில் நிறைவேற்றிவிட்டால் இந்த மாதத்திலோ அல்லது வருகிற அக்டோபர் மாதத்திலோ மேல் சபைக்கு இந்த மசோதா போக வேண்டும். மேல் சபைக்குப் போய் அங்கு இது நிறைவேறுவதற்குமுன், நான் ஏற்கனவே குறிப்பிட்ட அந்த மசோதாவை இங்கு பிரேரேபித்து விடலாம். இங்கு பிரேரேபித்து, இந்த மன்றம் பரிசீலனை செய்து, இன் னும் இரண்டு மூன்று மாதங்களில் சட்டமாக்கிவிடலாம். நாங்கள் இருக் கும்போதே இந்தச் சட்டத்தை ஆக்கிவிடத்தான் போகிறோம். அதற்கு பிறகு எதிர்புறத்திலிருக்கிறவர்கள் வந்து நல்ல முறையில் அமுல் நடத் தட்டும். எப்படியோ சட்டத்தை நல்ல முறையில் அமைத்துவிட வேண்டு மென்பது உங்கள் உத்தேசம். சீக்கிரத்தில் இதையும் தயாரித்து நிறை

[Sri M. Bhaktavatsalam] [19th September 1961

வேற்றலாம் என்று இருக்கிறோம். ஆகவேதான் இந்த மசோதா தனியாக வந்திருக்கிறது. வேறு இதில் ஒன்றும் இல்லை என்று சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

* THE HON. SRI M. A. MANICKAVELU: கனம் உப தலைவர் அவர்களே, இங்கு நடந்த விவாதத்தைப் பார்த்தால் எனக்கு ஒரு சந்தேகம் எழுந்தது. விவாதிக்கப்படுவது நில உச்ச வரம்பு மசோதாவா அல்லது அற நிலைய ஸ்தாபன பாதுகாப்பு மசோதாவா என்பதுதான் அந்த சந்தேகம். விவாதம் அப்படி மத ஸ்தாபனங்கள் சம்பந்தமாகவே சென்றது. நாம் விவாதிப்பது நில உச்ச வரம்பு மசோதாதான். நில உச்ச வரம்பு மசோதாவைக் கொண்டே மத ஸ்தாபனங்களை சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்பது நம்முடைய நோக்கமல்ல. நிலத்தில் பாடுபடுகிற விவசாயிகளுக்குப் பாதுகாப்பு இருக்க வேண்டும். நிலம் கிடைக்க வேண்டுமென்பதற்காக ஒரு நபர் 30 ஏக்கர் வைத்துக்கொள்ளலாம் என்று உச்சவரம்பு செய்தோம். தேவஸ்தானம், மடாலயத்திற்கு 200 ஏக்கர் என்று வைத்தோம். பொதுவாக இச் சட்டத்தின்கீழ் மடாலயங்களை கட்டுப்படுத்த முடியாது என்று சட்ட நிபுணர்கள் சொன்னார்கள். அரசியல் அமைப்பு 26-வது ஷரத்தில் விரிவாக இருக்கிறது.

Article 26 (c) of the Constitution provides that, subject to public order, morality and health, every religious denomination or any section thereof shall have the right to own and acquire movable and immovable property.

The right conferred by this Article is not subject to any qualification except those specifically mentioned in the Article viz., public order, morality and health. Though a ceiling may be imposed in respect of lands held by a religious denomination and though the surplus lands may be acquired by the Government by virtue of Article 31 (2) of the Constitution, it is doubtful whether future acquisition of land by a religious denomination can be prohibited.

ஆகவே இந்தப் பிரிவுப்படி நாம் ஒன்றும் செய்ய முடியாது. ஆகவே இதற்கு நாம் விலக்கு கொடுத்தோம். நாம் மட்டுமல்ல. உத்திரப் பிரதேசம், ஆந்திரப் பிரதேசம், கேரளா போன்ற நான்கைந்து ராஜ்ஜியங்களிலும் கொடுத்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். அப்படி விலக்கு கொடுக்காமல் இதிலே கொண்டுவந்தால், இதில் ஏதாவது தடங்கல் வந்தால் இது எல்லாவற்றையும் பாதிக்கும். நாம் அவசரமாக சாதாரண நபர் 30 ஏக்கருக்கு மேல் வைத்துக்கொள்ளக்கூடாது என்பதாக வெல்லாம் செய்கிறோம். அதையும் மடாலயங்களுக்கு வைத்து, எல்லாக் காரியங்களும் தாமதமாக போகக்கூடாது எனபதற்காக விலக்கு கொடுத்தோம். டஸ்டிக் அலவன்ஸ் என்று கொடுத்து விடலாம் என்று சொல்லுகிறார்கள். இப்பொழுது இருக்கிற கணக்கைப் பார்த்துக் கொடுக்கலாம். ஜனநாயக ஆட்சிக்கு வேறுபட்ட கொள்கையுடையவர்கள்கூட வரலாம். இந்த ஸ்தாபனங்களுக்கு சாதாரணமாக சொத்து எழுதி வைப்பவர்கள் சூரிய, சந்திரன் இருக்கும் வரையில் என்றே எழுதிவைத்து விடுகிறார்கள். செய்கிற தர்மம் நிலையாக இருக்கவேண்டுமென்பதற்காகத்தான் நிலமாக எழுதி வைக்கிறார்கள். கோயில்களைக்கூட பார்க்கலாம் கருங்கல்லினால் கட்டினார்கள். மலைகளையே கோயில்களாக குடைந்தார்கள். பொதுவாக தர்மம் நிலைத்திருக்க வேண்டுமென அவர்கள் நிலமாக எழுதி வைத்திருப்பதற்குப் பதில் நாம் வேறு எந்த பொருள் கொடுப்பதற்கு சரியாகாது. அவைகளுக்கு நிலம் அதிகமாக இருக்கிற நிர்வாகம் தென்றால் அதை ஒழுங்குப்படுத்தி சரியான முறையில் நடைபெற நாம் ஏற்பாடு செய்யலாம். அதுவும் இப்பொழுதெல்லாம்

பள்ளிக்கூடம், மருத்துவசாலை போன்றவைகளுக்கெல்லாம், தர்மம் செய்ய வசதி செய்யப்படுகிறது. அந்த மத ஸ்தாபனங்களிலே வெறும் மதம் என்பது மட்டுமல்ல, இத்தகைய பொதுக் காரியங்களுக்கும் செலவு செய்ய வழி வகை செய்து வருகிறோம். இன்னும் சிலர் ஏதோ கற்பனையில் சொன்னார்கள். அவர்களுககு கற்பனை பண்ண முடியும். எனக்கு அதைப்பற்றி தெரியாது. பொதுவாக இந்த மசோதாவில் அதைப் பற்றி எல்லாம் இல்லை. இந்த மசோதாவின நோக்கம் தெளிவாக விளக்கப்பட்டிருக்கிறது. இந்த மசோதாவின்கீழ் தர்ம ஸ்தாபனங்கள், மடாலயங்கள் சொத்தை கட்டுப்படுத்த வழியில்லாததால் அவைகளுக்கு விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. அப்படி விதி விலக்கு அளித்திருப்பது சரிதான் என்று நான் சொல்லுகிறேன்.

DEPUTY SPEAKER : The question is—

'That clause 2 do stand part of the Bill'.

Clause 2 was put and declared carried.

The hon. Member Sri M. Kalyanasundaram demanded a poll and the division bell was rung.

DEPUTY SPEAKER : Once again I will put clause 2 to the vote of the House. The question is—

'That clause 2 do stand part of the Bill'.

Clause 2 was put and carried.

*Clause 3.*

DEPUTY SPEAKER : The question is—

'That clause 3 do stand part of the Bill'.

Now, I shall take up each sub-clause of clause 3 separately for discussion, as each sub-clause is important.

*Sub-clause* (1).

SRI T. SAMPATH : Sir, I move the following amendment :—

'In clause 3, for sub-clause (1), *substitute* the following :—

"(1) 'agriculture' includes horticulture, fruit-growing and seed growing and agricultural and agriculturists shall be construed accordingly".

SRI R. SRINIVASA IYER : Sir, I second the amendment.

SRI S. NAGARAJA MONIGAR : Sir, I move the following amendment :—

'In sub-clause 1 (*b*), after the word "cross", *add* the following words "medicinal herbs".'

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The sub-clause and the amendments are before the House for discussion.

SRI T. SAMPATH : Mr. Deputy Speaker, Sir, the object in moving my amendment is very simple. In the original Bill the expression 'agriculture' has been defined in a simple way and in a crisp manner. It says—

' "agriculture" includes horticulture, fruit-growing and seed-growing, and "agricultural" and "agriculturist" shall be construed accordingly.'

But now it has been amended in a wider way. It is always not feasible to give such a wide definition because it will give room for trouble and it will also create complications. Therefore, I suggest that the original definition as found in the original Bill may be adopted. In fact I have copied the same wording used in the original definition in my amendment and I hope the Hon. Minister will accept it.

SRI S. NAGARAJA MONIGAR : Mr. Deputy Speaker, Sir, my amendment is simple. I want that the words 'medicinal herbs' should be added after the words 'crops'. Medicinal herbs are very important for human life and if they are included, it will help matters. Therefore, I have moved my amendment.

* THE HON. SRI M. A. MANICKAVELU : ஐயா, இந்த இரண்டு திருத்தங்களையும் ஒத்துக்கொள்வதற்கில்லை. "மெடிஸினல் ஹெர்ப்ஸை" சேர்க்கவேண்டுமென்று சொல்கிறார்கள். க்ராப்ஸ் என்பதில் எல்லாம் சேருகிறது. ஒவ்வொன்றையும் குறித்துக்கொண்டே போனால் நீண்டு கொண்டே போகும். இருக்கிற வார்த்தையில் இது அடங்கியிருக்கிறது. ஆகவே அதற்கு அவசியமில்லை. பின், "ஸிம்பிளாகவும், கிருஸ்பாகவும்" இருக்கவேண்டுமென்று திரு. சம்பத் அவர்கள் சொன்னார்கள். நம் நிலையில், "ஸிம்பிளாகவும் கிருஸ்பாகவும்" இருந்தால் பிரயோஜனப்படாது. விரிவாகச் சொன்னால்தான் நம் நோக்கத்திற்கு சரியாகயிருக்கும். முதலில் பில்லில் இருந்ததைத்தான் விளக்கிப்போட்டிருக்கிறோம். அவரும் செலக்ட் கமிட்டியில் இருந்திருக்கிறார். ஆகவே இப்பொழுது இருப்பதுபோல் இருந்தாலே போதும். "டயரி பார்மிங், லைவ்ஸ்டாக் ப்ரீடிங்" எல்லாம் சேருகிறது. ஆகவே இந்த திருத்தங்களை ஒப்புக்கொள்வதற்கில்லை.

The amendments were by leave withdrawn.

*Sub-clause* (2).

SRI T. SAMPATH : Sir, I move the following amendment :—

'In clause 3, sub-clause (2), for the words beginning with "any business" and ending with "from agricultural land" *substitute* the following :—

"Intense and improved method of agriculture".'

SRI R. SRINIVASA IYER : Sir, I second the amendment.

SRI S. NAGARAJA MONIGAR : Sir, I move the following amendment :—

'In sub-clause (2) in line 3, for the word "main" *substitute* the word "sole".'

19th September 1961]

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER: The sub-clause and the amendments are before the House for discussion.

**Sri T. SAMPATH**: இது அக்ரிகல்ச்சரல் கம்பனி சம்பந்தமானது. இதிலுள்ளபடி பார்த்தால்

"agricultural company means any company formed for the purpose of carrying on any business that has for its main object the acquisition of gain by the company, etc. . . ."

என்றிருக்கிறது. இதில் "இன்டன்ஸ் அன்ட் இம்ப்ரூவ்ட் மெதேட் ஆப் அக்ரிகல்ச்சர்" என்று போடவேண்டுமென்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இதைச் சேர்த்தால் சரியாக இருக்கும் என்ற நோக்கத்தோடு தான் கொடுத்திருக்கிறேன்.

**Sri S. NAGARAJA MONIGAR**: சப் கிளாஸ் 2-ல் லாப நோக்கம் பற்றி, "மெயின் ஆப்ஜக்ட்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதை "ஸோல் ஆப்ஜக்ட்" என்று சொல்லலாம் என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன். இது ஒரு வெர்பல் அமென்ட்மென்ட் போல்தான். வேறு காரணம் இல்லாவிடில் இதை ஏற்றுக்கொள்ளலாம் என்று கருதுகிறேன்.

**The Hon. Sri M. A. MANICKAVELU**: அக்ரிகல்ச்சரல் கம்பனியை நாம் "டிபைன்" செய்திருக்கிறோம். "ஸோல் ஆப்ஜெக்ட்" என்று வைத்துவிட்டால் அதன் "ஸ்கோப் ஸ்பியர்" குறைகிறது. இதில், ஸப்ஸிடியரி ஆப்பரேஷன்ஸ்கூட இருக்கிறது. ஆகவே "மெயின்" என்றே இருக்கலாம். விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிற கம்பனி என்று வைப்பதுதான் தாத்பரியம். ஆகவே, இதை இனி மேலும் குறுக்கி "இன்டன்ஸ் அன்ட் இம்ப்ரூவ்ட்" என்று செய்யவேண்டியதில்லை.

The amendments were by leave withdrawn.

*Sub-clause* (5).

**Sri T. SAMPATH**: Sir, I move the following amendment:—

'In clause 3, sub-clause (5), for the words "any Gazetted Officer", *substitute* the following:—

"any judicial officer not below the rank of a Sub-Judge or the District Revenue Officer".'

**Sri R. SRINIVASA IYER**: Sir, I second the amendment.

DEPUTY SPEAKER: The sub-clause and the amendment are before the House for discussion.

**Sri T. SAMPATH**: இதில் "ஆதரைஸ்ட் ஆபீஸர்" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆதரைஸ்ட் ஆபிஸர் என்றால் எந்த கெஜெட்ட் ஆபீஸரையும் நியமிக்கலாம் அரசாங்கம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எனது திருத்தம், நீதிபதிகள் அல்லது டிஸ்ட்ரிக்ட் ரெவின்யூ ஆபீஸர் இவர்களை நியமித்தால் சௌகரியமாகயிருக்கும் என்ற நோக்கத்தோடு திருத்தம் கொடுத்திருக்கிறேன். இது சட்டமாகும்போது, சட்ட சம்பந்தமான விஷயங்களைக் கவனிக்கவும் சட்ட அனுபவம் பெற்றவர்களை நியமித்தால் சட்டத்தை விளக்குவதற்கு நல்ல வாய்ப்பு இருக்கும் என்ற நோக்கத்தோடு தான் **"any judicial Officer not below the rank of a Sub-Judge or the District Revenue Officer"** என்று திருத்தம் கொடுத்திருக்கிறேன்.

பொறுக்குக் கமிட்டியில் கூட இது பற்றி விவாதம் நடந்தது. அப்பொழுது சுப்பையா முதலியார் அவர்கள் கூட இப்படிப்பட்டதொரு திருத்தத்தை கமிட்டியில் பிரேரேபித்தார் ஆனால் அது ஏற்றுக்கோள்ளப்படவில்லை. ஆகவே ஒரு ஜுடிஷியல் ஆபீஸர் அல்லது டிஸ்ட்ரிக்ட் ரெவன்யூ ஆபீஸரைப் போட்டால் இந்தச்சட்டத்தை நல்ல முறையில் நன்கு அமுல் நடத்த உதவிகரமாகயிருக்கும் என்ற நோக்கத்தோடுதான் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்வதில் கஷ்டமிருக்காது என்றுதான் நான் எண்ணுகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தத் திருத்தத்தை இப்போதும் ஒப்புக்கொள்வதற்கில்லை. இப்போது இருக்கிறபடி இருந்தால், சப்-ஜட்ஜையோ அல்லது டிஸ்ட்ரிக்ட் ரெவன்யூ ஆபீஸரையோ போட்டுக் கொள்ளலாம். ஆனால் இந்தத் திருத்தத்தின்படி போட்டுவிட்டால் இவரைத்தான் நியமிக்கவேண்டும் என்று ஆகிவிடும். மேலும் இந்த டிஸ்ட்ரிக்ட் ரெவன்யூ ஆபீஸர் பதவி எத்தனை நாளைக்கு நீடித்திருக்குமோ என்னவோ தெரியாது. ஆகவேதான் இதில் கெஸட்டட் ஆபீஸர் என்று போட்டிருக்கிறது. இப்படியே இருந்தால் யாரை வேண்டுமானாலும் போட்டுக் கொள்ளலாம். ஆகவே இந்தத் திருத்தம் அவசியமில்லை என்று நினைக்கிறேன்.

SRI T. SAMPATH : கனம் உதவி சபாநாயகர் அவர்கள், அமைச்சர் அவர்கள் இப்போது சொன்ன பதிலில் . . .

DEPUTY SPEAKER : No explanation is necessary. I want to know whether the hon. Member is pressing his amendment or not.

SRI T. SAMPATH : I am not pressing, Sir.

The amendment was by leave withdrawn.

*Sub-clause* (7).

SRI S. NAGARAJA MONIGAR : Sir, I move—

In sub-clause (7), for the words 'ceiling area' ***substitute*** the words 'ceiling extent'.

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The sub-clause and the amendment are before the House for discussion.

SRI S. NAGARAJA MONIGAR : நான் கொடுத்திருக்கும் திருத்தத்தில் "ஸீலிங் ஏரியா" என்றிருப்பதை "ஸீலிங் எக்ஸ்டென்ட்" என்று மாற்றலாம் என்று கோரியிருக்கிறேன். இது வார்த்தையளவில் இருக்கின்ற திருத்தம்தான். ஏரியா என்றிருந்தால் கொஞ்சம் கான்டியூஸாக இருக்கும் என்று கருதுகிறேன். எக்ஸ்டன்ட் என்று இருந்தால் வேறு வேறாக இருப்பதையும் குறிக்கும். ஆகவே இதை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI M. A. MAVICKAVELU : கனம் அங்கத்தினர் சொல்வதும் ஒரு வார்த்தைதான் ஆனால் சட்ட பாஷையில் ஏரியா என்றிருப்பதுதான் நல்லது. ஆகவே இதில் எந்தவிதமான திருத்தமும் வேண்டியதில்லை.

The amendment was by leave withdrawn.

*Sub-clause* (9).

SRI R. SRINIVASA IYER : Sir, I move the following amendment :—

'*Omit* the words " and includes any decree-holder who has obtained as attachment of land in execution of a decree or order ".'

The amendment was duly seconded.

DEPUTY SPEAKER : The sub-clause and the amendment are before the House for discussion.

* SRI R. SRINIVASA IYER : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு மனிதனுடைய நிலத்தில் உச்சவரம்புக்கு மேல் இருந்து அதை எடுத்துக் கொண்டு அதற்கு நஷ்டஈடு கொடுக்கிற நேரத்தில், அவர் கடன் பட்டு இருந்தால் கடன்காரர்களுக்கும் கொடுக்கலாம் என்று பின்னால் விதிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. ஜாமீன் வைத்து இருக்கின்ற ஸெக்யூர்ட்டி கிரடிட்டார்களுக்கு தனியாக சலுகை காட்டவேண்டியது நியாயம்தான். ஜப்தி பண்ணியிருந்தால், சிவில் பிரொஸீஜர் கோட் பிரகாரம், டிகிரி ஹோல்டருக்கு ஜப்தி செய்வதில் சொத்தில் இண்டரஸ்ட் இருப்பதில்லை. ஜப்தி பண்ணினால், செக்ஷன் 73 பிரகாரம் ரேட்டபிள் டிஸ்டிரிபுஷனுக்கு மனு போடலாம். இவ்விதம் வரும்போது மற்ற டிகிரி ஹோல்டர்களுக்கும் விகிதாச்சாரமும் உண்டு. உண்மையில் கடன்காரர்களுக்கு கொடுக்கிறது என்றிருந்தால் எல்லா கடன்காரர்களுக்கும் கொடுங்கள். இல்லையென்றால் மற்ற டிகிரி ஹோல்டர்களுக்கு பாதகம் ஏற்படும் வகையில் எதையும் நாம் செய்யாமல் இருக்க வேண்டும். அவ்விதம் செய்வதாக இருந்தால் சிவில் ப்ரொஸீஜர் கோட் பாதிக்கும். ஆகவே இதில், " அட்டாசிங் டிகிரி ஹோல்டர் " என்று சொல்லும்போது சர்க்காரிலேயே அதற்கு வழி செய்து கொடுக்க வேண்டும். கோர்ட் சேல்ஸ் நடத்துகிறோம். அது கூடாது. என்று நான் சொல்லவில்லை. பொதுவாக இதில் ஏலம் எடுக்கிறவன், உச்சவரம்புக்குட்பட்டவன்தான் ஏலம் கேட்க முடியும். மற்றவர்களுக்கு இதில் உரிமை இருக்க முடியாது. நஷ்டஈடு கொடுக்கும்போது செக்யூர்டு கடன்காரர்களுக்கும் கொடுத்துவிட்டு ஜப்தி செய்த டிகிரி ஹோல்டருக்கு மட்டும் கொடுப்பது என்று சொல்வது உகந்ததாக இல்லை. ஆகவேதான் நான் கொடுத்திருக்கின்ற திருத்தத்தினால் எந்த விதமான பாதகமும் ஏற்படாது. " ஸிம்பிள் மணி கிரடிட்டார்க்கும் பாதகமில்லாத முறையில் சிவில் ப்ரொஸீஜர் கோட் இருக்கிறது. இதில் தனியாக சலுகை கொடுக்க வேண்டும் என்ற முறையில் சொல்லப்பட்டிருக்கிறது.

'Creditor' means a secured creditor and includes any decree-holder who has obtained an attachment of land in execution of a decree or order.

இதில் இன்னும் பல சங்கடங்கள் வரும். ஜப்தியின் பேரில், பாத்திய மனு அதன் பேரில், அசல் வியாஜ்யம் அதன் பேரில் இரண்டு கோர்ட்களுக்கும் போகக்கூடிய நிலை ஏற்படும். நஷ்டஈடு கொடுக்கவேண்டும் என்று சொல்லும்போது, செக்யுர்ட் கிரேடிட்டார்க்கு கொடுக்கவேண்டும் என்று சொல்லும்போது சிம்பிள் மணி கிரெடிட்டார்க்கும் கொடுப்பதற்கு வழி செய்திருக்கவேண்டும். இல்லையென்றால் செக்ஷன் 73, சிவில் ப்ரொஸீஜர் கோட், பிரகாரம்தான் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடியும். ஆகவே தொடர்ந்து சட்டுனே நல்லமுறையில் வசூல் செய்வதற்கு வழி செய்து கொடுக்கவேண்டும். ஆகவே இதன் பேரில் நான் கொடுத்திருக்கும் திருத்தத்தை தயவுசெய்து ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI T. T. DANIEL : I would like to bring to the notice of the Hon. Minister another important point.

The word "creditor" as it now stands means a secured creditor and includes any decree-holder who has obtained an attachment of land in execution of a decree or order. I would suggest that the landlord is liable for all debts and all his properties are liable for all his debts, whether they are secured or not. I go a step further. I would say that the word "creditor" should include all the creditors of the landlord. They are liable to get their money back out of the compensation amount. If the definition of the word "creditor" as it now stands is incorporated in the Act, it will appear that some of the creditors who have not obtained a decree will not be able to get the money, when the landlord gets the compensation amount for his surplus lands, then it is against the existing provisions of the Civil Procedure Code. All the money received as compensation amount has to be paid to all the creditors of the landlord whether the creditor has obtained a decree or not and whether he is a secured creditor or not. I would bring to the notice of the Hon. Minister that the word 'creditor' should include all the creditors of the landlords, whether the creditors obtain a decree or not and whether there is attachment of property or not. It should include all creditors. After satisfying the claim of the decree-holder who has not made an attachment, the surplus money has to be paid to the creditor, who has not filed any civil suit to obtain a decree. According to the provisions of the Civil Procedure Code, all the compensation amount must be paid to all the creditors of the landlord.

SRI T. SAMPATH : உதவி சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஏனென்றால் அது சட்ட ரீதியாகச் சில சில கஷ்டங்களை உண்டாக்கும் என்று கருதுகிறேன். "செக்யூர்ட் கிரெடிட்டர்" "சிம்பிள் கிரெடிட்டர்" என்று தனியாகப் பிரித்துச் சொல்லவேண்டும். அந்த நோக்கத்துடன் "செக்யூர்ட் கிரெடிட்டார்" என்று விளக்கியிருக்கிறார்கள், ஏனென்றால், சிம்பிள் க்ரெடிட்டாருக்கு சிவில் ப்ரொஸீஜர் கோடில் வழிகள் இருக்கின்றன. நஷ்ட ஈடு கிடைப்பதை அட்டாச் செய்ய உரிமை இருக்கிறது. அவர்கள் சொன்ன மாதிரி, பிரித்துச் சொல்லாமல் "க்ரெடிட்டார்" என்று மாத்திரம் "டெஃபினிஷன்" போட்டு குறிப்பிட்டால் கஷ்டங்களுக்கு உள்ளாக நேரிடும் என்று நான் எண்ணுகிறேன். ஆகையால் அதை எற்றுக்கொள்ளுவது சரியல்ல என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

SRI T. T. DANIEL : Sir, it appears from what the hon. Member has just now said that a creditor of the landholder, who is bound in law to get his share from the compensation amount, is precluded from getting his share. The compensation amount has to be given to all the creditors of the landholder according to the provisions of the C.P.C. So far as the secured creditor is concerned, he has to be paid first. Then coming to the decree-holder who has made an attachment and the decree-holder who has not made an attachment, the balance amount has to be distributed as pointed out by the hon. Member Sri R. Srinivasa

Iyer. But the creditor, who has not even filed a civil suit and has not got a decree in his favour, is excluded. He does not get any amount. The balance amount goes to the landholder. By enunciating such a law, we are enunciating a law which is contrary to the provisions of the Civil Procedure Code. The landholder is liable to pay all his creditors. By inserting a definition of this kind, it appears that a creditor, who has not obtained a decree is not bound in law to get his share from the compensation amount. I would therefore submit that the definition 'creditor' should include all the creditors of the landholder.

SRI T. SAMPATH rose.

DEPUTY SPEAKER: The hon. Member has no right of reply. I call upon the Hon. Minister to reply.

* THE HON. SRI M. A. MANICKAVELU: Just now it has become a lawyer's paradise (Laughter). The hon. Member Sri R. Srinivasa Iyer expressed one point of view and just the opposite view was expressed by Sri T. T. Daniel. Now the idea is that a secured creditor should be protected, because we are taking his land. The liability attached to the land should not be taken away. That is why we have said "secured creditor". We have gone a step further and said that a simple creditor, who has attached the land in pursuance of a decree, should also be protected, because he has attached that particular land. Our principle is that if the land has been a matter of security for the debt, the creditor has to be protected. In this case he has got a security by attaching the land. In other words, a simple debt has been converted into a secured debt by virtue of the attachment and therefore we have given this protection to that person also. I am also advised that there will be no difficulty. So I am not in a position to accept the amendment.

SRI R. SRINIVASA IYER: I am not pressing my amendment, Sir.

The amendment was by leave withdrawn.

*Sub-clause* (10).

SRI M. KALYANASUNDARAM: The Government have given notice of an amendment. That amendment can be moved first and the other amendment given notice of by the hon. members may be treated as amendments to the Government amendment.

THE HON. SRI M. A. MANICKAVELU: Sir, I move—

In clause 3, *for* sub-clause (10), *substitute*, the following sub-clause, namely :—

" (10) 'Cultivating tenant'—

(i) means a person who contributes his own physical labour or that of any member of his family in the cultivation of any land belonging to another, under a tenancy agreement, express or implied; and

(ii) includes—

(*a*) any such person who continues in possession of the land after the determination of the tenancy agreement; or

(*b*) the heir of such person, if the heir contributes his own physical labour or that of any member of his family in the cultivation of such land, or

(*c*) a sub-tenant if he contributes his own physical labour or that of any member of his family in the cultivation of such land, but

(iii) does not include a mere intermediary or his heir."

SRI T. SAMPATH : Sir, I move the following amendment :—

In Clause 3, *for* sub-clause (10), *substitute* the following :—

" (10) 'tenant' means any person who has paid or has agreed to pay rent or other consideration for his being allowed by another to occupy the land of the latter under a tenancy agreement, express or implied and includes,

(*a*) his heirs, assignees, legal representatives or persons deriving rights through him;

(*b*) a cultivating tenant;

*Explanation.*—'cultivating tenant' means a person who contributes his own physical labour or that of any member of his family in the cultivation of any land belonging to another under a tenancy agreement and includes any such person who continues in possession of the land after the determination of the tenancy agreement or the heirs of such person but does not include a mere intermediary or his heirs."

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move the following amendment :—

" In sub-clause (10), after the words "and includes", *add* the following words "kaieruwaramdars and matteruwaramdars in Tiruchirappalli district and pethuwaramdars in Tirunelveli district and includes any cultivating sub-lessees under tenants and also includes. "

The amendment was duly seconded.

19th September 1961]

Sri V. K. RAMASWAMY MUDALIAR : Sir, I move—

"In sub-clause (10), *for* the words 'the heirs of such person', *substitute* the words 'the heirs of such person if the heirs had been contributing their labour to the cultivation of the land'."

The amendment was duly seconded.

Sri R. SRINIVASA IYER : Sir, in view of the Government amendment, I am not moving my amendment.

Sri N. K. PALANISAMI : Sir, I am not moving my amendment.

DEPUTY SPEAKER : The sub-clause and the amendments are before the House for discussion.

Sri N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, நான் கொடுத்திருந்த திருத்தத்தைப் பிரேரேபிக்கவில்லை. சர்க்காரே அந்தத் திருத்தத்தின் அடிப்படையில் ஒரு திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்கள். ஹைக்கோர்ட்டில் "ஸப்-லெஸ்ஸி" டெனென்டாகக் கருதப்படாமல் யார் குத்தகைக்கு எடுத்துக்கொண்டார்களோ அவர்களை "கல்டி வேட்டிங் டெனென்ட்" என்று தீர்மானம் செய்யததன் காரணமாக இப்போது உண்மையாக நிலத்தில் உழுபவனுக்கு பாதுகாப்பு இல்லை என்ற காரணத்தினால் திருத்தம் கொடுத்திருந்தேன். இப்போது சர்க்காருடைய திருத்தம் சரியாக இருக்கிறது. (10)-வது உப பிரிவிலும், (47)-வது உப பிரிவிலும் ஒரே மாதிரி இருக்கிறது. சர்க்கார் எனது திருத்தத்தின் கருத்தை ஏற்றுக்கொண்டிருப்பதால் எனது திருத்தத்திற்கு அவசியமில்லை என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

Sri V. K. KOTHANDARAMAN : உதவி சபாநாயகர் அவர்களே, சப்-க்ளாஸ் (10)-லே சேர்க்கவேண்டியதைப் பற்றி நான் ஒரு திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதாவது கைவார்வாரம்தார், மாட்டுவாரம் தார் திருச்சி ஜில்லாவில் இருக்கக் கூடியது. பேத்துவாரம்தார் திருநெல்வேலி ஜில்லாவில் இருக்கக் கூடியது. இதற்காக தனியாக ஒரு சட்டத்தையும் நாம் உருவாக்கியிருக்கிறோம். ஆகவே இன்றைக்கு இந்த இரண்டு ஜில்லாக்களிலே வேறு பல ரூபத்தில் இருக்கக்கூடிய இந்த கைவார்வாரம்தார், மாட்டுவாரம்தார், பேத்துவாரம்தார் என்ற அடிப்படையில் விவசாயம் செய்யக்கூடிய விவசாயிகளையும் இந்தச் சட்டத்திலே இந்த (10)-வது உப பிரிவில் சேர்க்கப்பட வேண்டும் என்பது எனது திருத்தம். இதை விட்டுவிடுவோமேயானால் பின்னால் சட்ட நிபுணர்களெல்லாம் சேர்ந்து கொண்டு, இப்போதே நாம் பார்க்கிறோம் எழுத்துக்கு எழுத்து எந்த அளவுக்கு வேறு வேறு ரூபத்தில் அர்த்தப்படுத்தும் நிலையை ஏற்படுத்துகிறார்கள் என்பதை. ஆகவே விவசாயிகளைப் பாதுகாக்கும் முறையில் இதையும் அதோடுகூட சேர்த்துக்கொள்ளுவது நலமாக இருக்கும் என்ற அடிப்படையில் இதைக் கொடுத்திருக்கிறேன். அமைச்சர் அவர்கள் இதை ஏற்றுக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன்.

Sri T. SAMPATH : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, (10)-வது பிரிவு கல்ட்டிவேட்டிங் டெனென்ட் யார் என்பதை விளக்கும் பிரிவு. அரசாங்கத் தரப்பில் இதற்குத் திருத்தம் கொண்டு வந்திருக்கிறார்கள். பின்பு (47)-வது உப பிரிவைப் பார்த்தால் டெனென்ட் யார் என்று விளக்கம் தரப்பட்டிருக்கிறது. என்னுடைய திருத்தத்தின் நோக்கம் இரண்டும் ஒரே இடத்தில் ஒரே பிரிவில் இருந்தால் அதைப் படிப்பதற்கும்

புரிந்துகொள்ளுவதற்கும் சௌகரியமாக இருக்கும் என்பதுதான். அதிலும் முதலில் டெனென்ட் யார் என்று விளக்கிவிட்டு பிறகு கல்டிவேட்டிங் டெனென்ட் யார் என்று விளக்குவது சட்ட ரீதியாக சரியாக இருக்கும். ஆகையால் (47)-வது பிரிவில் சொல்லப்பட்ட டெனென்ட் யார் என்ற விளக்கத்தை முதலில் போட்டு, பின்பு கல்டிவேட்டிங் டெனென்ட் யார் என்று விளக்கம் கொடுக்கலாம். இதிலே கொள்கையில் ஒன்றும் வித்தியாசம் இல்லே. ஆகையால் இதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று நான் நினைக்கிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : In their amendment, the Government have actually accepted my suggestion. Therefore, I do not propose to talk on my amendment.

12-30 a.m. * SRI R. SRINIVASA IYER : ஸார், சர்க்காரிலே இந்த 252-வது திருத்தம் கொண்டு வந்தபிறகு, வேறு எந்த மாற்றுத் திருத்தமும் தேவையில்லே. எனவே நான் என்னுடைய திருத்தத்தைப் பிரேரேபிக்கவில்லே. ஸ்ரீ கோதண்டராமன் கொண்டு வந்த திருத்தமும் தேவையில்லே. இது கல்டிவேட்டிங் டெனென்ட் என்ற வார்த்தைக்கு தர்ஜமா அல்லது டெபனிஷன் ஆகும். கையேறுவாரம், மாட்டேறுவாரம் சட்டத்திலே டெனென்ட் என்பதற்கு டெபனிஷன் இருக்கிறது. அந்த டெபனிஷன்படி டெனென்ட் என்பதற்கும், கல்டிவேட்டிங் டெனென்ட் என்பதற்கும் அந்தச் சட்டத்தின்படி அதில் பல சலுகைகளுக்கு இடமிருக்கிறது. அதை இந்த மசோதாவில் சேர்க்கக் கூடாது. சேர்க்கவும் முடியாது. ஆகவே அதற்குச் திருத்தம் தேவையில்லே. இந்த டெபனிஷனிலேயே "மீன்ஸ் அண்டு இன்க்ளூட்ஸ்" என்பதையும் சேர்த்துப் போடப்பட்டிருக்கிறது. அதனுல் அதிலே சாகுபடி செய்யக்கூடிய எல்லோரும், சொந்தச் சாகுபடி செய்பவராக இருந்தாலும், அல்லது மாட்டை வைத்துக்கொண்டு மாட்டேறுவாரம் செய்பவராக இருந்தாலும், அல்லது கையேறுவாரம் செய்பவராக இருந்தாலும் அந்தச் சட்டத்திலே அதற்கு வழிவகை செய்யப்பட்டிருக்கிறது. கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் பிரேரேபித்த திருத்தத்தில் பேத்துவாரம்தார் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. இன்னும் அதைப்பற்றி சட்டம் ஏற்படவில்லே. திருநெல்வேலியில் அந்த மாதிரி இருப்பதாக சொல்லுகிருர்கள். அதைப்பற்றி விவரம் தெரியவில்லே. அது அப்படி இருக்கலாம். கையேறுவாரம்தார், மாட்டேறுவாரம்தார் என்பதைத் பற்றித்தான் திருச்சியிலுள்ள 41 கிராமங்களுக்கு சட்டமாக்கப்பட்டிருக்கிறது. பேத்துவாரம்தார் என்பதும் டெனென்ட் சாகுபடியாளரைத்தான் குறிப்பிடுகிறது. இப்படித் தனித்தனியாகச் சொல்லப்போனுல், ஒவ்வொரு ஜில்லாவிலும் எத்தனே வகையினர் இருக்கின்றனர் என்பதை யெல்லாம் பார்த்து, சேர்க்க வேண்டிவரும். ஸ்ரீ சம்பத் அவர்கள் சர்க்கார் டெபனிஷனேடு சேர்த்துக் கொண்டு வரலாம் என்று சொன்னுர்கள். சேர்ப்பதற்கான விவரங்கள் இருக்கிறது. அதனுல் தனியாக திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி என்று டெபனிஷனில் சேர்த்தால், மற்ற ஜில்லாக்களுக்கு ஆபத்து. அதனுல் சர்ச்சைகள் ஏற்படும். ஆகவே இப்போது சர்க்கார் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்திற்குப் பிறகு, கல்டிவேடிங் டெனென்ட் என்ற டெபனிஷனுக்கு தர்ஜமா சரியாக ஏற்பட்டுவிடுவதால், மற்ற திருத்தங்கள் தேவை இல்லே என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆகவே, சர்க்கார் திருத்தத்தை ஏற்றுக் கொள்ளும்படி இந்தச் சபையை கேட்டுக்கொள்கிறேன்.

* SRI M. P. SUBRAMANIAM : சட்ட மன்றத் துணைத் தலைவர் அவர்களே, நண்பர் வி. கே. கோதண்டராமன் அவர்கள் கொடுத்திருக்கக்கூடிய திருத்தத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். ஏற்கனவே "கல்டிவேட்டிங் டெனென்ட்" சாகுபடியாளர் என்ற சொல்லானது கையேறுவாரம்தார், மாட்டேறுவாரம்தார் ஆகியோரை உள்ளடக்கியதாக சமயத்தில் தெளிவாக்கப்படவில்லே. இதை தெளிவாக்குவதில் அரசாங்கத்திற்கு எந்தவிதமான ஆட்சேபணேயும் இருப்பதற்கு நியாயம் இல்லே. ஆனுல் இந்த விதி இப்படியே இருந்தால் பல

சிக்கல்கள் எழ இடமளிக்கும். கையேறுவாரம், மாட்டேறுவாரம் செய்பவர் களையும் (சாகுபடியாளர்) என்ற சொல் உள்ளடக்கியிருக்கிறது என்ற உத்திரவாதம் இந்த விதியில் இல்லை. ஆதலால் திரு. கோதண்டராமன் கொடுத்துள்ள திருத்தத்தில் உள்ளபடி கையேறுவாரம்தார், மாட்டேறு வாரம்தார் என்று சொல்லப்பட்டுள்ள தெளிவான விளக்கத்தை சேர்த்துக் கொள்வது அவசியம் என்று சொல்லிக்கொண்டு, அவர் கொடுத்துள்ள திருத்தத்தை ஆதரிக்கிறேன்.

**Sri M. KALYANASUNDARAM**: கனம் உதவி சபா நாயகர் அவர்களே, கையேறுவாரம்தார், மாட்டேறுவாரம்தார் என்று பொதுவாகத் தெளிவாகப் போட்டிருப்பதில் யாருக்கும் எவ்வித ஆட்சே பணையும் இருக்க முடியாது. இந்த டெபனிஷன்படி கையேறுவாரம்தார், மாட்டேறுவாரம்தார் ஆகியோரிடையே இருக்கக்கூடிய சலுகைகள் வேறு. அதற்கு சட்டத்தில் கொடுக்கப்பட்டுள்ள சலுகைகள்தான் கொடுக்கப்படும். அந்தச் சட்டம் இந்தச் சபையிலே இருக்கிறபோது, சில சூழ்நிலையிலே அவர்களுக்கு கொடுத்த சலுகை ரொம்பக் கட்டுப்பாடு உள்ளதாகப்பட்டது. திருச்சி ஜில்லா பூராவும் இந்தச் சலுகை விஸ்தரிக்கப்படாமல், 21 கிராமங் களுக்குமட்டுமேதான் இந்தச் சலுகைகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. திருச்சி ஜில்லாவில் இதுமாதிரி போட்டுள்ளதால் அங்குள்ளவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டுமென்று பல கிராமங்களிலே உள்ள அரசியல் வாதிகளும் கோர்ட்டுக்கு வருகிறார்கள். இது அமைச்சர் அவர்களுக்கும் தெரியும். சில கிராமங்களிலே இந்தக் குறை இருந்து வருகிறது. இது போன்று திருநெல்வேலி ஜில்லாவிலே பங்கு அடிப்படையில், குத்தகை என்றில்லாமல் மகசூலில் பங்கு பெறக்கூடிய ஒரு முறை இருந்து வரு கிறது. அப்படிப்பட்ட குத்தகை இதிலே சேர்க்கப்படவில்லை. பல இடங் களில் இன்னும் சாகுபடியாளர்களுக்கு பாதுகாப்பு அளிக்கப்படவில்லை. பின்னால் இதுபற்றி தெளிவாக தெரிவிக்கப்படும் என்று சொல்லப்படுகிறது. அதை இப்போதே தெளிவாகச் சொல்லிவிடுங்கள். இல்லாவிட்டால் கோர்ட்டுக்கு திருப்பித் திருப்பிப் போய் சண்டை விளைவிக்கக் கூடும். ஆகவே இப்படிப்பட்ட தெளிவான ஒரு டெபனிஷன் அவசியம் தேவைப் படுகிறது. 8-வது சேப்டரைத் தவிர, வேறு எந்த சேப்டருக்கும் இந்த டெபனி ஷன் அவசியமில்லை. இப்படி சேர்த்து வைத்துவிட்டால், இதற்குமுன் அர சாங்கம் போட்டுள்ள விதியோடு சேர்த்து அரசாங்கமே முயற்சி எடுத்துக்கொண்டு நல்ல முறையிலே இந்தத் திருத்தத்தை கொண்டுவந்ததாக அமையும்.

"Cultivating tenant" means a person who contributes his own physical labour or that of any member of his family in the cultivation of any land.

இந்த மாதிரி, இந்தத் திருத்தமானது கல்டிவேஷன் டெனென்ட் ஆக்டிலேயும், பேர் ரெண்ட் ஆக்டிலேயும் செய்யப்பட வேண்டும். அப்படி ஒரு திருத்தத்தைச் செய்தால்தான் சப்-டெனென்ட் ஆக்டுக்கும் பாதகம் ஏற்படாது. பலர் இதற்குள் வெளியேற்றப்பட்டிருக்கிறார்கள். இதனால் இதைப் பல முறை நான் வலியுறுத்தி இருக்கிறேன். ஆகவே, நண்பர் வி. கே. கோதண்டராமன் அவர்கள் கொண்டுவந்துள்ள திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்பு கிறேன்.

* **The Hon. Sri M. A. MANICKAVELU**: இந்தச் ஷரத்திலே கல்டிவேட்டிங் டெனென்ட் யார், என்ன என்பதைப் பற்றித் தெளிவாக சொல்லப்பட்டிருக்கிறது. இந்த மாதிரி சொல்லப்பட்டிருக்கிற திலே யார் யார் வருகிறார்கள் என்றோ அல்லது இந்த மாதிரி சொல்லும் போது இதில் இவர்கள் வரமாட்டார்கள் என்றோ சொல்வதற்கு இந்தச் சட்டத்தில் இடம் கிடையாது. இப்போது மாட்டுவாரம்தார் கையேறுவாரம் தார் என்று வரும்போது, எனக்குத் தெரிந்த வரையில் இதிலே கையேறு வாரம்தார் வராது. மாட்டுவாரம்தார்கூட 10 எக்கருக்கு மேல் நிலம்

யார் வைத்திருக்கிறார்களோ, அவர்களுக்கு ஒரு சட்டமிருக்கிறது. மற்றவர்களுக்கு கிடையாது. இதிலே பொதுவாக எந்தவிதமான தகவலும் கொடுக்கவில்லையே, யார் யார் வரலாம் என்பது தெரியவில்லை என்று சொல்கிறார்கள். இதைத் தவிர, திருநெல்வேலியில் புதிதாக ஒரு முறை இருக்கிறதே, அதையும் இதோடு சேர்த்துக்கொள்ளலாமே என்றும் சொல்கிறார்கள். நாம் கொடுத்துள்ள விதியிலே கையேறுவாரம்தாரராக இருந்தாலும், மாட்டுவாரம்தாரராக இருந்தாலும் அல்லது வேறு எந்த மாதிரியாக இருந்தாலும், பேஷாக வரலாம். இரண்டாவது, டெனென்ட் பற்றி ஒரு சிறு ஷரா இங்கும் குறிக்க வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஒத்துக்கொள்கிறேன். ஆனால், நாம் இப்போது அந்த ஸ்கீமுக்கே போகவில்லையே ? இப்போது இருக்கும் விதியே மிகவும் சுலபமாக இருக்கிறது. இந்த மாதிரி செய்துவிடலாம், அந்த மாதிரி செய்து விடலாம் என்று சொன்னால், இதைச் சேர்த்துவிடலாம் அதைச் சேர்த்து விடலாம் என்று சொன்னால், வெறொன்று பிறந்து கொண்டே இருக்கும். அப்போது அதையும் சேர்க்க வேண்டிவரும். ஆகவே, இருக்கிறதை அப்படியே இருக்கலாம், வைத்துக்கொள்ளலாம் என்று சொல்ல விரும்புகிறேன்.

The amendment of Sri T. Sampath and Sri V. K. Ramaswamy Mudaliyar were, by leave, withdrawn.

The amendment of Sri V. K. Kothandaraman was put and lost. The Government amendment was put and carried.

*Sub-clause* (11).

DEPUTY SPEAKER : I suggest that Sri N. K. Palanisami may move his amendment proposing the substitution of a new sub-clause and not the amendment proposing the omission of the sub-clause.

SRI N. K. PALANISAMI : Sir, I accept the suggestion. I move—

"*For* sub-clause (11) *substitute* the following :—

'(11)' 'date of commencement of this Act' means '1st January 1955'.

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move—

"*For* sub-clause (11), *substitute* the following :—

'(11)' 'date of the commencement of this Act' means 'the date on which the Madras Cultivating Tenants' Protection Bill was introduced in the Assembly in 1955'."

SRI V. K. KOTHANDARAMAN : I second the amendment, Sir.

SRI M. P. SUBRAMANIAM : Sir, I move—

"*For* sub-clause (11) of clause 3, *substitute* the following :—

'(11)' 'the date of the commencement of this Act' means 'the date on which the Madras Act XXV of 1955 came into force, namely, 27th September 1955'."

19th September 1961]

SRI K. SATTANATHA KARAYALAR : I second the amendment, Sir.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, I move—

"In clause 3, *for* sub-clause (11), *substitute* the following :—

'(11) ' date of commencement of this Act ' means ' the date of publication of this Act'."

SRI S. RAMASWAMI THEVAR : I second the amendment, Sir.

DEPUTY SPEAKER : The sub-clause and the amendments are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 1955-ம் வருஷத்திலிருந்து இந்தச் சட்டம் அமுலாக வேண்டுமென்ற திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன். 1956-ம் வருஷத்தில் திட்டக் கமிஷன் சொல்லியிருக்கிறது என்னவென்றால், 1956-ம் வருஷத்திற்கு 2, 3 வருஷங்களுக்கு முன்பிருந்தே இந்தச் சட்டம் அமுலாக்கப்பட வேண்டும் என்பதுதான். காரணம் என்னவென்றால், மாலபைடி டிரான்பெர்ஸ் அதாவது வேண்டுமென்றே உச்ச வரம்பு சட்டத்திலிருந்து தப்பித்துக்கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடு மற்றவர்கள் பெயரில் எழுதி வைக்கப்பட்ட நிலங்களையும் இந்த உச்ச வரம்பு சட்டம் கட்டுப்படுத்த வேண்டும் என்பதுதான். அது மட்டுமல்ல, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தை எடுத்துக்கொண்டால் அதில் நன்றாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சர்க்கார் நிலச் சீர்திருத்த சட்டம் கொண்டுவருவதற்கு முன்பாக மாலபைடி டிரான்ஸ்பெர்ஸ் பூராவையும் தடை செய்ய வேண்டும். அப்படித் தடைசெய்த பிறகுதான் இந்தச் சட்டம் கொண்டுவர வெண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால், நம்முடைய ராஜ்யத்தில் அதற்கு நேர்மாறாக, நேர் விரோதமாகச் செய்கிறார்கள். 1960-ம் ஆண்டு எப்ரல் மாதத்திலிருந்து அமுலுக்குக் கொண்டுவருகிறார்கள். ஏனென்றால், அதற்கு முன்பே மாற்றி எழுதி வைக்கத் தவறிவிட்டவர்கள், மாற்றி எழுத வேண்டும் என்பதற்காகத்தான் அந்தத் தேதியிலிருந்து அமுலுக்குக் கொண்டுவருகிறார்கள் என்பது நமக்குத் தெரியும். பிளானிங் கமிஷன் 1955-வது வருஷத்திலிருந்து அமுலாக்க வேண்டுமென்று சொல்லுவதற்கு முக்கிய காரணம், போதுமான அளவு நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கொடுக்க வேண்டும் என்பதுதான். நிலம் இவ்வளவுதான் இருக்க வேண்டும் என்று ஒரு ப்ரொவிஷன் இருந்தால் போதும். மீதி இருக்கக் கூடிய பூமியை நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுத்துவிடலாம். ராஜஸ்தான் மசோதாவில் 7 பக்கங்கள்தான் இருக்கிறது. இங்கே ஷுகர் பாக்டரி சம்பந்தப்பட்ட மட்டில் 12 ப்ரோவிஷன்ஸ் இருக்கின்றன. யார் இம்மாதிரி வரப்போகிறார்கள். இதற்கு ஒரு ஹைகோர்ட்டு ஜட்ஜ் வேறு.

1955-ம் வருஷத்தில் முதல் முதலில் அசெம்பிளியில் கல்டிவேடிங் டெனன்ட்ஸ் ப்ரொடக்ஷன் மசோதாவை பிரேரேபித்தபொழுது மந்திரி அவர்கள் சொன்னார்கள், ஆரம்பக் கட்டம் அது, மூன்று முறையாக நிலச் சீர்திருத்தம் கொண்டுவரப்போகிறோம் என்று. அந்தச் சட்டத்தை பாஸ் பண்ணக்கூடிய நேரத்தில் இந்த மாகாணத்திலுள்ள பெரிய மிராசுதார்கள், சர்க்கார் இம்மாதிரிச் சட்டம் கொண்டு வரக்கூடாது என்று நிர்ப்பந்தம் செய்தார்கள். அதையும் மீறி கல்டிவேடிங் டெனன்ட்ஸ் ஆக்ட் கொண்டுவந்தார்கள். அதிலிருந்தே அவர்களுக்கு இருக்கக்கூடிய பூமிகளை மற்றவர்கள் பேர்களுக்கு மாற்றியிருக்கிறார்கள். அடிப்படைக் கொள்கை என்ன ? எந்த அளவுக்கு ஒருவர் பூமியை உழ முடியுமோ அந்த அளவுக்குத்தான் அவருக்கு பூமி இருக்க வேண்டும். மீதி உள்ள பூமியை எடுத்து நிலம் இல்லாதவர்களுக்குக் கொடுக்க வேண்டும் என்பதுதான்.

நடைமுறையில் என்ன கொள்கை இருக்கிறது என்றால், எப்படியோ அவர்கள் குறிப்பிட்ட ஓரளவுக்கு மட்டும்தானே நிலம் வைத்திருக்கிறார்கள். அப்படியிருக்கும்பொழுது அவர்கள் மீதி நிலத்தை யாருக்கு விற்றால் என்ன என்று கேட்கப்படுகிறது. நிலம் இல்லாதவர்களுக்கு நிலம் கிடைக்க வேண்டும், கிராமப் பொருளாதாரம் அபிவிருத்தி அடைய வேண்டும், தேசத்தில் பொருளாதார அபிவிருத்தி ஏற்படவேண்டும், தொழில் மயமாக வேண்டும், வேலையில்லாத் திண்டாட்டம் போக வேண்டும் என்ற அடிப்படையை எடுத்துக்கொண்டால், நிலச் சீர்திருத்தத்தினால் நிலம் இல்லாதவர்களுக்கு பூமி கிடைக்க வேண்டியது அவசியம். அதை விட்டு விட்டு, எப்படியோ ஒருவருக்கு இவ்வளவு நிலம்தான் இருக்கவேண்டு மென்று சொல்லுவது சரியல்ல. அவர்கள் மீதி நிலத்தை விற்றால் அது பூமி இல்லாதவர்களுக்குப் போய்ச் சேருமா ? பணம் இருப்பவர்கள்தான் அதை வாங்கக்கூடும். பணம் இல்லாதவர்களுக்கு, கூலி விவசாயி களுக்கு எந்தவிதத்திலும் அதனால் பிரயோசனம் இல்லை. திட்டக் கமிஷன் சொன்ன பிரகாரம் 1955–ம் வருஷத்திலிருந்து இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். நியாயமாக பாகப் பிரிவினை செய்திருந்தால் விதிவிலக்குக் கொடுக்கலாம். ஆனால், வேண்டுமென்றே இம் மாதிரிச் சட்டம் வந்தாலும் பாதிக்காமல் இருக்க வேண்டும் என்ற முறையில் எழுதி வைத்திருந்தவர்கள் நிலங்களையும் இந்தச் சட்டம் கட்டுப்படுத்த வேண்டும். மைசூரை எடுத்துக்கொண்டால் 1953–ம் வருஷத்திலிருந்து அமுலுக்குக் கொண்டு வருகிறார்கள். அஸாமில் 1957–ம் ஆண்டிலிருந்து அமுலுக்குக் கொண்டுவருகிறார்கள். அப்படியிருக்கும் பொழுது நம் ராஜ்யத்தில் மட்டும் இம்மாதிரி சட்டத்திலிருந்து தப்பித்துக் கொள்ளும்பொருட்டு மற்றவர்கள் பெயரில் எழுதி வைத்ததற்கு விதி விலக்குக் கொடுப்பதற்கு என்ன காரணம் ? ஆகவே, 1955–ம் வருஷத்தி லிருந்து இந்தச் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்ற இந்தத் திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**Sri V. K. KOTHANDARAMAN** : 11–வது உப பிரிவுக்கு என்னுடைய திருத்தம் என்னவென்றால், 1955–வது ஆண்டு முதற்கொண்டே இந்தச் சட்டத்தை அமுல்படுத்த வேண்டும் என்பதுதான். எதற்காக வேண்டி அப்படி அமுல்படுத்த வேண்டுமென்று சொன்னால், சென்ற 4, 5 வருஷ காலமாகவே டாம் டாம் போட்டு விளம்பரம் செய்தால் எப்படி இருக்குமோ, அதே போல, நமது அமைச்சர்கள் ராஜ்யத்தில் போகக்கூடிய இடங்களிலெல்லாம் நாங்கள் உச்ச வரம்பு சட்டம் கொண்டு வரப்போகிறோம், யார் யார் அதற்குள் என்ன செய்ய வேண்டுமோ அதையெல்லாம் செய்துகொள்ளலாம் என்ற அளவுக்கு விளம்பரம் செய்து விட்டதால், யார் யார் எந்த எந்த மாதிரி எழுதி வைத்துக்கொள்ள வேண்டுமோ, அம்மாதிரி பல பினாமி மாற்றங்களை எழுதிவிட்டார்கள் என்பது நான் சொல்லாமலே அவர்களுக்குத் தெரிந்த விஷயம்தான். இந்த நிலைமையிலே இந்தச் சட்டத்தை 1960–ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6–ம் தேதியிலிருந்து அமுலுக்குக் கொண்டுவந்தால், எந்த நோக்கத்தோடு இந்தச் சட்டம் கொண்டுவரப்படுகிறதோ, அந்த நோக்கம் நிறைவேறுமா என்பதை பிராதான்யமாக நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். குறிப்பாகச் சொல்லவேண்டுமென்றால், இது எப்படி இருக்கிறது என்று சொன்னால், கனம் அமைச்சர் அவர்கள் கிராமக் கதை சொல்லுவது போல் சொன்னால், எல்லா வேலையும் முடிந்து குழந்தை பிறந்த பிற்பாடு, கலியாணத்திற்கு ஏற்பாடு செய்வதுபோல் இருக்கிறது. எதை நாம் பிராதான்யமாக சிந்திக்க வேண்டுமென்றால், எந்த நோக்கத்தோடு நாம் சட்டம் கொண்டுவருகிறோமோ, அந்த நோக்கம் நிறைவேறக்கூடிய முறையில் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட வேண்டும். ஒரு வேளை அமைச்சர் அவர்களுடைய நோக்கம் நிறைவேறுமோ என்னவோ ? ஆனால் பிராதான்யமாக மக்கள் மத்தியில் நாம் எதைச் சொன்னோமோ அந்த லட்சியத்தை நிறைவேற்றக்கூடிய அளவுக்கு இந்த மசோதா அமைந்திருக்கிறதா என்றால், கொஞ்சம்கூட அந்த நோக்கம் நிறைவேற முடியாத

அளவுக்கு இருக்கிற காரணத்தினால், கண்டிப்பாக இந்தச் சட்டத்தை 1955-வது ஆண்டு முதற்கொண்டே அமுலுக்குக் கொண்டுவருவதுதான் நலமாக இருக்கமுடியும். அதற்காகத்தான் அம்மாதிரி திருத்தம் கொடுத்திருக்கிறேன். அதை அமைச்சர் அவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI M. P. SUBRAMANIAM: சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே, இந்த பதினோராவது உட்பிரிவு எந்தத் தேதியிலிருந்து சட்டம் அமுலுக்கு வரும் என்று சொல்லுகிறது. 1960-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 6-ந் தேதியிலிருந்து வரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. நானும் மற்றவர்களும் தீர்மானங்கள் கொடுத்திருப்பதன் நோக்கம், இது 1955-வது ஆண்டிலிருந்து அமுலுக்கு வரவேண்டும் என்பதுதான். அதற்கு முக்கிய காரணம், 1955-ல் சாகுபடியாளர்கள் பாதுகாப்புச் சட்டம் கொண்டுவந்த காலம் முதலாக, அது நிலச் சீர்திருத்தச் சட்டத்தின் முதல்படி. இனி படிப்படியாக உச்ச வரம்புச் சட்டம்வரை சட்டங்கள் வரும் என்று அறிவிக்கப்பட்டது. அதிலிருந்து தொடர்ந்து அரசாங்கத்தில் உள்ள வர்கள் இதுதான் அரசாங்கத்தின் கொள்கை, இப்படிச் சட்டம் கொண்டு வரப்போகிறோம், கொண்டுவரப்போகிறோம் என்று நாளுக்கு நாள், வருஷத்திற்கு வருஷம் சொல்லிவந்திருக்கிறார்கள். அமைச்சர்களும், ஆளும் கட்சியைச் சேர்ந்தவர்களும் அம்மாதிரிச் சொல்லிவந்திருக்கிறார்கள். அதற்கு ஆதாரம் இருக்கிறது. 30 எக்கராதான் உச்ச வரம்பு என்றும் பொறுப்புள்ளவர்கள் சொல்லியிருக்கிறார்கள். அதற்கும் மேலாக உள்ள நிலங்களை சர்க்கார் எடுத்துக்கொண்டு நிலமில்லாதவர்களுக்குப் பிரித்துக் கொடுப்பார்கள் என்றும் அறிவிக்கப்பட்டது. இதனால் பெரு நிலச் சுவாந் தார்கள் சட்டத்திலிருந்து தப்ப வழி வகை தேடிக்கொண்டு வந்திருக்கிறார் கள். இதில் கஷ்டம் என்னவென்றால், அரசாங்கத் தரப்பிலிருந்தே சொல்லுகிறார்கள். "நிலம் குவியக் கூடாது என்பதுதான் நோக்கம்; அது நிறைவேறிவிட்டது" என்று. அதுதான் சட்டத்தின் நோக்கமா? மசோதாவின் துவக்கத்தில்கூட, நிலம் சிலரிடம் குவியக்கூடாது என்று சொல்லப்பட்டிருப்பது உண்மைதான். இப்பொழுது அது எட்டில்தான் பலருக்கு பிரிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், உண்மையாக அந்த நிலங்கள் அவர்கள் கைக்கு வரவில்லை. ஒரு 100 எக்கரா இருக்கிறது என்றால், அதை 4, 5 பேர்கள் பேரில், 10 குழந்தைகள் பேரில் பாகப்பிரிவினை செய்து, சட்டத்திலிருந்து தப்ப வழி செய்ய மாற்றி எழுதி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், அதைச் சாகுபடி செய்வது, பரிபாலிப்பது எல்லாம் ஒருவரேதான். இதை நினைவுபடுத்த விரும்புகிறேன். அப்படி யும் நிலம் வாங்கியிருப்பவர்கள், எனக்குத் தெரிந்தவரை பல இடங்களில் விவசாயத்தில் அனுபவம் இல்லாதவர்களும், வியாபாரிகளும், நகர்ப்புறத் தவர்களும்தான். இது மசோதாவின் நோக்கத்திற்குப் புறம்பானது. ஆகவேதான் சொல்லுகிறோம், இந்த மசோதாவை 1955-லிருந்து அமு லாக்கினால், இம்மாதிரி பிரிவினைகளை எல்லாம் தகர்ந்து போகும். 1955-லிருந்து அமுலாக்குவதில் கஷ்டங்கள் பல ஏற்படலாம். அதை நான் உணருகிறேன். அதற்காக சீரான நோக்கத்தைக் கைவிடக் கூடாது. எத்தனையோ சிக்கல்களைத் தீர்க்க யோசனைகள் சொல்லக்கூடிய ஆட்கள் இருக்கிறார்கள். ஆகவே, 1955-லிருந்து அமுலுக்குக் கொண்டுவருவதில் உள்ள சிக்கல்களையும் தீர்க்கமுடியும். இன்றைக்கு ஷுகர் போர்டு, லாண்டு போர்டு என்று பல குழுக்களை ஆங்காங்கே ஏற்படுத்தி அதிகாரி களும், மற்றவர்களும் இருப்பதால் இம்மாதிரிச் சிக்கல்களையும் தீர்க்க முடியும். ஆகவே, இந்த விஷயத்தில் கொஞ்சமும் தயக்கங் காட்டாமல் இந்தச் சட்டத்தை 1955-லிருந்தே அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். அப்பொழுதுதான் நாம் நன்மை செய்தவர்கள் ஆவோம். விவசாயி களுக்கு நன்மை செய்வதில் எல்லாக் கட்சிக்காரர்களும் முன்னணியில் நிற்கிறார்கள். இப்படி 1955-லிருந்து அமுலாக்குவதால் உபரி நிலமும் அதிகமாகக் கிடைக்கும். ஆகவே, அரசாங்கம் இதை ஒத்துக்கொள்ள உடன்பட வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்லிக்கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: உதவி சபாநாயகர் அவர்களே, என் திருத்தம் மசோதா சட்டம் செய்த பிறகு, பப்ளிஷ் ஆன தேதியிலிருந்தே அமுலுக்கு வரவேண்டும் என்பதாகும். எங்கு பார்த்தாலும், எந்தச் சட்டத்திலும் எந்த நாட்டிலும், ஒரு சட்டம் பாஸ் பண்ணிய பிறகுதான் அமுலுக்கு வரும். அதைப் பின்னுக்குத் தள்ளி 15 வருஷங்களுக்கு முன்பிருந்தே அமுலாக்குவது சரியாகாது. அப்படிச் செய்தால் பல காரியங்களை ரிஜிஸ்ட்ரார் ஆபீசில் கான்சல் செய்ய வேண்டியிருக்கும். அதைப் பற்றி எல்லாம் அதிகமாகச் சொல்லவேண்டியதில்லை. நிலத்தை அனேகம் நபர்கள் விற்றுவிட்டார்கள் என்று சொல்லுகிறார்கள். இன்றைக்கு ரெவின்யூ அமைச்சர் நிலத்தை நான் விற்க முடியுமா அல்லது என் நிலத்தை வேறு யாராவது விற்க முடியுமா? ரீட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் (Retrospective effect) கொடுக்க வேண்டும் என்று சொல்லும் நண்பர்கள், அது நடைமுறையில் சாத்தியமா என்று யோசித்துப் பார்க்க வேண்டும். முன்னேற்ற நாடுகளிலெல்லாம், பிரஸிடெண்ட் அஸெண்ட் வந்த பிறகுதான் ஒரு சட்டம் அமுலுக்கு வரும். ஆகவே, அந்தத் தேதியைப் பின் தள்ளிப் போடுவது சரியாகாது. சர்க்கார் என் திருத்தத்தை ஒப்புக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI R. SRINIVASA IYER: ஸார், இப்பொழுது இந்த 11–வது சப்–கிளாஸுக்கு திருத்தமே தேவையில்லை. அதற்குச் சில காரணங்களைக் கூற விரும்புகிறேன். இதைத் திருத்த வேண்டும் என்று சொல்லும் கனம் கலியாணசுந்தரம், கனம் எம். பி. சுப்பிரமணியம், கனம் ராமசாமி முதலியார் இவர்கள் செலக்ட் கமிட்டியில் மெம்பர்களாக இருந்தவர்கள். இதைப் பற்றி விவாதம் செய்த பிறகு, date of the commencement of this Act " means the date of which the Madras Land Revenue (the Fixation of Land Ceiling on Land) Bill, 1960, was published in the *Fort St. George Gazette*, namely, **6th day of April 1960** என்று சொல்லி, அந்தப்படி இந்த சப்–கிளாஸு அமைந்திருக்கிறது. இதிலே "பர்ஸ்ட் பப்ளிகேஷன்" என்றிருக்கிறது. அதில் "பர்ஸ்ட்" என்பது தேவையில்லை என்று நினைக்கிறேன். ஆனால் சர்க்கார் எப்படி நினைக்கிறார்களோ. ஆந்திரா பில்லில் இந்த மாதிரி நில உச்ச வரம்பு சட்டம் அமுல் ஆக்குவது சட்டம் இயற்றிய பிறகு சர்க்கார் நோடிபிகேஷன் பேட்டிலிருந்து என்று இருக்கிறது.

1955–லிருந்து அமுலாக்க வேண்டுமென்று சொல்லும்பொழுது, 1947–லிருந்து என்றும் சிலர் சொன்னார்கள். கனம் ராமசாமி முதலியார் பிரஸிடன்ட் அஸெண்ட் கொடுத்த தேதியிலிருந்து என்கிறார்கள். ஆகவே, இரண்டு எக்ஸ்ட்ரீம் வியூக்கள் இருக்கின்றன. இப்பொழுது இருக்கும் 6–4–1960–லிருந்து என்பதே சரி. அதை மாற்றவேண்டாம் என்றுதான் நான் சொல்லுகிறேன். அப்படியேதான் நிதியமைச்சரவர்களும் செலக்ட் கமிட்டியில் சொன்னார்கள்.

சிலபேர்கள் சொல்லுகிறார்கள், பலருக்கு எழுதி வைத்துவிட்டார்கள் என்று. சட்டம் தெரிந்தவர்களுக்குத் தெரியும், சட்டத்தில் "Inpari delicto" என்ற ஒரு விதி இருப்பது. ஆகவே, இப்படியெல்லாம் எழுதி வைத்து மோசம் செய்யவே முடியாது. அப்படி எழுதிவைக்கப் பட்டவர்கள் சட்டம் எப்பொழுது அமுலுக்கு வரும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்கள். சமயற்காரிக்குக்கூட எழுதி வைத்திருக்கிறார்கள் என்று சொன்னார்கள். எனக்குத் தெரியும் அப்படிப்பட்டவர்களெல்லாம் சட்டம் அமுலுக்கு வரவேண்டுமென்று காத்துக்கொண்டிருக்கிறார்கள். மோசடியாக எழுதி வைத்திருந்தால் சட்டத்தை மீறுவதற்காக எழுதி வைத்தேன் என்று பிறகு யாரும் சொல்ல முடியாது. எழுதி வைக்கப்பட்டவர் தன்னுடையது என்று சொன்னால் ஆகிவிடும். மோசடியாகச் செய்திருந்தால் அதெல்லாம் செல்லாது. எல்லோரும் ஒரே நோக்கத்தோடு பேசுகிறார்கள். நிலத்தைப் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று இந்தச் சட்டம் கொண்டுவரவில்லை. ப்ரீயாம்பிளில் சொல்லியிருப்பது

19th September 1961] [Sri R. Srinivasa Iyer]

போல, ப்ளானிங் கமிஷன் சொல்லியிருப்பதுபோல, நிலம் ஜாஸ்தியாக ஒரு சிலரிடம் குவிந்து போகக் கூடாது என்பதுதான் நோக்கம். நிலத்தை பிரித்துக் கொடுக்க வேண்டுமானால், தமிழ்நாடு ஜனத்தொகையளவில் பார்த்தால், தலைக்கு கால் எக்கராகூட வராது. சொத்து உரிமையே இல்லையென்ற ராஜ்யம் வரும்போது, அப்படி இருக்குமோ என்னவோ, ஐவேஜியே கிடையாது என்கிற நிலைமை வந்தால் அப்படியாகலாம். ஆனால் இன்றைக்கு இந்தச் சட்டத்தின் நோக்கம் அதுவல்ல. ஆகவே தான் 30 எக்கரா என்று வைத்து, 5 நபர் உள்ள குடும்பத்திற்கு அம் மாதிரியான வழி வகை தேவை என்ற முறையில் செய்யப்பட்டிருக்கிறது. ஜாஸ்தியாகக் குவிந்திருக்கும் நிலத்தைப் பரவலாகச் செய்வதுதான் கருத்து. எல்லா நிலத்தையும் எடுத்து எல்லோருக்கும் பங்கு போட வேண்டும், பிரித்துக் கொடுக்க வேண்டும் என்றால், அது முடியவே முடியாது. வேலை வாய்ப்புக்களைத்தான் அதிகமாகக் கொடுக்கவேண்டும். அதுதான் மூன்றாவது திட்டத்தில் செய்ய இருக்கிறோம். இன்றைக்கு இது 1960–ம் ஆண்டு எப்ரல் 6–ம் தேதி முதல் அமுலுக்கு வரும். 1955–லிருந்து என்றால், ஏன் 1947 என்று சொல்லக் கூடாது ? அப்படி பின்னுக்குத் தள்ளிப் போடுவதில் பல விவகாரங்களுக்கு இடம் ஏற்படும். அப்படி விவகாரங்கள் அதிகமானால், வக்கீல்களுக்கு நல்ல வரும்படி வரும் என்று சொல்லலாம். அது ஒரு பக்கம் இருக்கட்டும். இந்த லாண்ட் ரிபார்ம்ஸ் சம்பந்தப்பட்ட வரையில், எல்லா ஸ்டேட்டுகளுக்கும் முன்னால் நம் மாகாணம் நிற்கிறது. 1952–ம் ஆண்டிலேயே தஞ்சாவூர் பண்ணையாள் பாதுகாப்புச் சட்டம் என்ற ஆக்ட் 14/52 பண்ணிவிட்டோம்.

1955–ம் வருஷத்தில் கல்டிவேடிங் டெனன்ட்ஸ் ப்ரொடக்ஷன் ஆக்ட் 1-00 p.m.
கொண்டு வந்தோம். 1956–ல் பேர் ரெண்ட் ஆக்ட் கொண்டு வந்தோம். இப்படி படிப்படியாக சாகுபடியாளர்களுக்கு, விவசாயிகளுக்குப் பாதுகாப்பு அளித்துக்கொண்டு வந்திருக்கிறோம். அதற்கு மாறாக இதில் ஜாஸ்தியாக, கடுமையாக சில விதிகளைச் செய்திருக்கிறார்கள். இப்பொழுது புதியதாக ஒன்றும் செய்யவில்லை. ஏற்கனவே செய்துகொண்டுவந்ததைத்தான் இப்பொழுதும் செய்கிறார்கள். லாண்ட் ரிபார்ம்ஸ் செய்யும்போது சிரமம் இல்லாமல் கொஞ்சம் கொஞ்சமாக நியாயமாகச் செய்து கொண்டு வந்திருக்கிறோம். நமது காங்கிரஸ் சர்க்கார் 1952–ம் வருஷத்திலிருந்தே இப்படிச் செய்துகொண்டு வந்திருக்கிறார்கள். சுமூகமான முறையில் செய்துகொண்டு வருகிறார்கள். மேற்படி ஆக்ட் வந்த பிறகு எவ்வளவு கேஸ்கள் வந்திருக்கிறதென்பதைப் பார்க்க வேண்டும். செலக்ட் கமிட்டியில் அதன் புள்ளி விவரங்கள் கொடுக்கப்பட்டன. வருஷமொன்றுக்கு ஒரு ஜில்லாவுக்கு 12 அல்லது 15, 16 எவிக்ஷன் கேஸ்களுக்கு மேல் கிடையாது. இது சட்டப்படி ஏற்பட்டது. அதனால் அறுபதாம் வருஷம் எப்ரல் மாதம் ஆறாம் தேதிக்கு முன் ரெட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் கொடுக்க வேண்டியது அவசியம் இல்லை. அதனால் விவகாரம்தான் அதிகமாகும். அதனால் எந்தப் பயனும் தராது. வியாஜ்ஜியங்கள்தான் அதிகமாக ஆகும். ஆகவே செக்ஷன் 3 , சப் கிளாஸ் (ii) இப்போது இருப்பது மேலானவைதான் என்று சொல்லிக்கொண்டு முடித்துக்கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : The discussion on the sub-clause will
be continued tomorrow. The House will now adjourn and meet 1-02 p.m.
again tomorrow at 8-30 a.m.

The House then adjourned.